# பிரபோதசந்திரோதயம்.



ஓர்

வேதாந்த நாடகம்

இது

பிர்ம்ம ஸ்ரீ-எஸ்-ராஜாசாஸ்திரியாரால்,

மொழி பெயர்க்கப்பட்டது.

மாயவரம்

ஆர். வைத்திநாதையர் அண்டு கம்பனியாரால்

வெளியிடப்பட்டது.

1911

ரிஜிஸ்டர் செய்தது.

| | | | |
|---|---|---|---|
| காலிகோ | 0 | 12 | 0 |
| ரப்பர் விலை | 0 | 10 | 0 |

# PREFACE

The Prabodha-chandrodaya is very widely known as a unique work of Krishnamisra in which the Vedanta, in its purest and most practical form, has been reduced to the form of a drama, which, for elegance of style and diction and the fulfilment of dramatic requirements, takes equal rank with the best classical dramas in Sanskrit literature. It has often been translated into Tamil prose as well as poetry, but these publications have the usual drawback of all translations of such abstruse works, namely, either the translation is too literal and the spirit of the original cannot be understood from the translation itself, or the translation, though rendered into a readable style, is not faithful to the original in all respects and thus fails to fulfil the main purpose of a translation. In the present work a sincere attempt has been made to avoid both these defects. The language and style of the translation has been made so simple that it can be easily understood by anyone that can read Tamil, and at the same time, great care has been taken that no word or idea in the orginal is lost sight of in the translation. It is the earnest hope of the translator that this publication will meet with general approval and his labours at bringing out an easy and, at the same time, accurate translation, will be amply rewarded if the present work should, to any extent, attract our worldly minded countrymen to the glory, the purity, and the practical usefulness of the Vedanta to popularise which was the sole aim of Krishnamisra in composing the original drama.

# முகவுரை

தர்மம், அர்த்தம், காமம், மோக்ஷம் என்னும் நான்குவித புருஷார்த்தங்களுள் மோக்ஷமே பரமபுருஷார்த்தம். அது நித்தியம். ஆநந்த வடிவமாயுள்ளது. அக்ஞானத்தை நிவர்த்திக்கக் கூடியது. வேதாந்த விசார ஜன்யஜீவ பிர்ம்மைக்கிய ஸாக்ஷாத்கார ஞானமே அந்த மோக்ஷத்திற்குச் சாதனம். நான்கு சாதனங்களையுடைய வனே அந்த விசாரத்திற்கு அதிகாரி. நான்கு சாதனங்களாவன. விவேகம், வைராக்யம், சமதமாதிகள், மோக்ஷஇச்சைகளேயாம். இந்த சாதனங்களைக் கொண்டு இவைகளுக்கு விரோதிகளான, காமம், குரோதம், லோபம் மோகம், மதம், மாற்சரியம் முதலிய வைகளை ஜயித்தல் வேண்டும். ஆகலால் காமாதிகளை வென்ற வனும் விவேகாதிகளோடு கூடினவனுமே அதிகாரியாகிறான். அவனுக்கு வேதாந்த விசாரத்தால் ஏற்படும் ஞானத்தால் மோக்ஷம் சித்திக்கின்றது. இதுவே வேதாந்த சித்தாந்தம்.

இது நிற்க, பலநூற்றாண்டுகளுக்கு முன் அதாவது ஆயிரம் வருடங்களுக்கு முன் மிதிலாதேசத்தில் ஸ்ரீகிருஷ்ணமிச்ரர் என்ற ஓர் வித்துவான் இருந்தார். இவர் வேதாந்த சாஸ்திரங்களை நன் குணர்ந்தவர். அந்த சாஸ்திரம் மாந்தர்களின் புத்தியில் ஆரூடமாக வேண்டியதன் நிமித்தம் அதனைச் சங்கிரகித்து பிரபோதசந்தி ரோதயமென்னும் ஓர் நாடகமாகச் செய்தனர். அதில் அதிகாரிகள் அவசியம் பெறவேண்டியதான காமாதிகளின் ஜயத் தையும் வைராக்யாதிகளுடைய உற்பத்தியையும் நன்றாக நிரூப் பித்திருக்கின்றனர். அந்த நாடகம் எளிய நடையில் நவரஸங்களு டன் கூடியது. ஆயினும் அது ஸம்ஸ்கிருத பாஷையிலிருப்பதால் யாவரும் எளிதில் அறிய முடியாததாயிருந்தமைபற்றி அதனை S. ராஜாசாஸ்திரியார் தமிழில்மொழிபெயர்த்துத்தமிழ்நாட்டாருக்கு உபயோகப் படும்படி செய்திருக்கின்றனர். நாம் பார்த்த மட்டில் அது ஸம்ஸ்கிருதத்திற்குச் சிறிதும் மாறுபடாமலே யிருக்கின்றது. இது தமிழ் நாட்டாருடைய நன்மதிப்பைப் பெறுமென்றே நம்பு கின்றோம்.

விஷ்ணுபுரம் }
7-8-11. }

வி. ஸா. ராமசந்திரசாஸ்ரியார்.

# அவையடக்கம்.

ஆஸ்திகோத்தமர்களே!

இந்தப் புத்தகத்தைப் பற்றிப் புகழாதாரும் வேதாந்தம் பேசாதாருமிங்கு காண்பதரிது. உலகத்தில் மானிடர்களுடைய மனமானது சுகமுறுங்காலத்து மமதை யென்கிற கொடிய வியாதியையும் துக்கமுறுங்காலத்து சஞ்சலமென்கிற பெருவியாதியையும் அடைகின்றது. அவ்விரு வியாதிகளுக்குட்படார் மிகச் சொற்பமே. தன் குணமறிந்து தன்னை மேற்றுக் கொள்ளும் மாந்தர்களுக்கு இந்த வேதாந்தம் அக்கொடிய வியாதிகளைப் போக்க அருமருந்தா யுபயோகப்படுகிறது. இத்தகைய அருமையான மருந்து பாபிகளுக்குக் கிட்டாது.

இப்புத்தகத்திற்கு முகவுரை யெழுதியுள்ள எனதாசிரியர் பிர்ம்மஸ்ரீ- வி- ஸா- இராமச்சந்திர சாஸ்திரியார் அவர்கள் இதைச் செவ்வனே விளக்கியுள்ளாராதலின் மேலுங் கூறாது விடுத்தனம்.

அந்த வேதாந்தஸாரம் விளங்குவது எளிதல்ல. அதை யாவருக்கும் எளிதிலுணர்த்தும் நல்லாசிரியனென்று இப்புத்தகத்தைக் கூறலாம். இதை நமது தமிழ்நாட்டார் அரிய தமிழில் மொழிபெயர்க்கவேண்டுமெனக் கருதிய யான், முன் திப்பிராஜபுரம் பிர்ம்மஸ்ரீ-வி- கே- சுப்பிரமணிய சாஸ்திரியார் அவர்களிடம் பாடங் கேட்டுத் தெரிந்துகொண்டபடி மொழி பெயர்த்து வெளியிடலானேன். இவ்விதமான அரிய கிரந்தத்தை மொழிபெயர்க்கக் கூடிய வித்துவான்களுக்கும் எனக்கும் வெகு தூரமாயினும், எனது குருவின் திருவருளாலும் பிர்ம்மஸ்ரீ- வி- கே- சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்களின் பேருதவியாலும், இந்நூலை மொழி பெயர்ப்பதிற் கொண்ட அவாவினாலுமே இதை முடித்தனன்.

ஸம்ஸ்கிருதத்திற்குச் சரியாகத் தமிழ் எழுதுவதென்பது மிகவும் அருமை. பொருள் விளங்குமாறும் தமிழ்ப் பதங்கள்

சரியாய்க் கிடைப்பது அதினும் அருமை. அக்குறை இந்த அரிய புத்தகத்தில் ஏற்படா வண்ணம், எனது நண்பரும் எமது ஆபீஸ் மானேஜருமாகிய வரகவி- திரு- அ- சுப்பிரமணிய பாரதியாரின் உதவியைக் கொண்டு வெளியிடலானேன்.

இதைத் தமிழில் மொழிபெயர்க்க உதவிபுரிவதில் தமது அரிய காலத்தைச் செலவிட்ட பிர்ம்மஸ்ரீ- வி- கே- சுப்பிரமணிய சாஸ்திரியாரவர்களுக்கும் எளிய தமிழில் எழுதியும் பிழையறப் பரிசோதித்தும் உதவிய எமது நண்பர் வரகவி- திரு- அ- சுப்பிரமணிய பாரதியாருக்கும் எனது மனப்பூர்வமான நன்றி செலுத்தக் கடமைப்பட்டவனாவேன்.

இது அரிய நூலாதலால் மொழி பெயர்ப்பில் குற்றங்களிருக்கும் என்பது திண்ணம். அவைகளைக் கொள்ளாது குணங்களைப் பாராட்டுவதுடன் இப்புத்தகத்தின் அடுத்த பதிப்பு அக்குற்றங்களின்றி வெளிப்படுமாறு அவைகளை எனக்கறிவிக்கவும் பிரார்த்திக்கின்றனன்.

ஜகதீசன் திருவருள் புரிவாராக.

S. ராஜாசாஸ்திரீ.

## சாற்றுக்கவிகள்.

---

திரிசிரபுரம்
பிர்ம்மஸ்ரீ- திரு- அ- சிவாநந்தசாகர யோகீசுவரரவர்கள்
இயற்றியது.

பொருவிலரு மறையினகப் பொருணிலவ விலகுபிர போதநற்சந்
திரவுதயவடமொழிநாடகநூலைத்தெ தன்மொழியிற்றிகழச்செய்தான்
பாவுலகி லெவருமுணர்ந் தினிதுய்யக்கருணையினற்பண்ணுர்வேதப்
பிரமகுல மணிபனைய ராஜ—சாஸ் திரிநாமப் பெரியோன் றனே.

---

சென்னை ஹிந்து தியலாஜிகல் ஹைஸ்கூல்
தமிழ்ப்பண்டிதர்
ம-ள-ள ஸ்ரீ கோ-வடிவேலு செட்டியாரவர்கள்
இயற்றிய

எழுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம். [மோர்ந்து,
விப்பிரர் குலத்து வியப்புற வுதித்து விழுப்பொரு ளனைத்தையு
சொப்பிரகாச மாகவே நிலைத்துத் துவக்கறுகிருட்ணவாரியன்செய்,
நப்பிர போத சந்திரோ தயத்தை நவையறு தமிழில்வா சகமாச்
செப்பமார் ராஜா சாஸ்திரி யிபற்றிச் சீர்சிறப் பேய்ந்தனன் மாதோ

---

M R Ry A. SANKARALINGAM PILLAI Avl. B. A.
Sub-Editor, The "HINDU."

Mr. S. Raja Sastriar's attempts to enrich the Tamil language are commendable. I have read some portions of his translation of the far-famed sanskrit work, Prabodhachandrodyam, and have been much impressed with his industry. The translation has been well done. The beauties of the original work have been ably brought out, and the author deserves to be congratulated on his successful attempt. In these days of trumpery novels and trashy stories a book of this kind shoud be a relief to the Tamil loving people.

16-8-1911. Mount Road.

# நாடக பாத்திரங்கள்.



சூத்ரதாரன்:—நாடகாசிரியன்.

நடீ:—அவன்மனைவி.

விவேகன்:—பிரதானநாயகன்.

மதி:—அவன் மனைவி.

வஸ்துவிசாரன்:—விவேகனுடைய கிங்கரன்.

ஸந்தோஷன்:—இவனுடைய நண்பன்.

புருஷன்:—உபநிஷத்தின் நாயகன்.

பிரபோதோதயன்:—புருஷனுடையகுமாரன்.

சிரத்தை:—ஸாத்விகீ, ராஜஸீ, தாமஸி யென்று மூன்றுவிதமாகப் பிரவர்த்திப்பது.

சாந்தி:—விவேகன் ஸஹோதரீ.

கருணை:—சாந்தியின் தோழி.

மைத்ரீ:—சிரத்தையின்தோழி.

விஷ்ணுபக்தி:—உபநிஷத்தின் தோழி.

உபநிஷத்தேவி:—வேதாந்த சாஸ்திரம்.

ஸரஸ்வதி:—விஷ்ணுபக்தியின்ஸகி.

க்ஷமை:—விவேகன் தாஸீ.

வைராக்யம்
நிதித்யாஸனம் } மனதிலிருந்து உண்டானவைகள்.
ஸங்கற்பம்

பாரிபார்ச்வகன் முதலியவர்கள்

மஹாமோகன்:—விவேகனுடைய சத்ரு

சார்வாகன்:—மஹாமோகன் நண்பன்.

| | |
|---|---|
| காமன்<br>க்ரோதன்<br>லோபன்<br>டம்பன்<br>அகங்காரன் | மஹாமோகன் அமைச்சர்கள். |

மனம்:—ஸங்கல்ப ரூபம்.

| | |
|---|---|
| திகம்பரன்<br>பிக்ஷு<br>சமணன்<br>காபாலிகன் | புத்தனைநிமதப் பிரவர்த்தகர்கள் |

மித்யாதிருஷ்டீ:—மோகபத்நீ.

விப்ரமாவதீ:—இவள் தோழி.

இரதி:—காமன் மனைவி

ஹிம்ஸை:—க்ரோதன் மனைவி

திருஷ்ணை:—லோபன் மனைவி

மற்றுஞ் சில சேடர்கள் முதலானோர்.

# பிரபோத சந்திரோதயம்.

காப்பு

ஞானச் செழுஞ்சுடரை ஞானதீ தப்பொருளை
மோனப் பரசிவத்தை முன்னவனை—யானை
முகத்தவனை வேத முழுமுதலை யன்ப
ரகத்தவனைக் கைதொழுவோம் யாம்

## (1) நாந்தி.



திஷ்டான ரூபியாகப் பிரகாசியாநின்ற எந்த பிர்ம த்தை அறியாமையால், நடுப்பகலில் கானலில் (2) சூரிய கிரணங்களினாலுண்டாகும் ஜலப்ரவாகம் காணப்படுவதுபோல் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்கிற பஞ்ச பூதங்களாலாகிய இந்த மூவுலகங்களும் காணப்படுகின்றனவோ, எந்தப்

---

(1) நாந்தி:—நாடகத்தின் ஆரம்பத்தில் நாடகசாலையின் அதிபரால் செய்யப்படுகிற தேவதா பிரார்த்தனை.

(2) கானலில் ஜலப்ரவாகம் காணப்படுவதுபோல் அதிஷ்டான ரூபியாகிய பிர்ம்மத்தில் மூவுலகங்களும் தோன்றுகின்றன வென்றும் அதனையறிந்தவர்களுக்கு அவை அப்படியே நசித்துப்போகின் றனவென்றும் சொல்லப்படுகிறபடியால் பிர்ம்மமே இவ்வுலகத்தின் ருஷ்டி, ஸ்திதி, ஸம்ஹாரம் இவைகளுக்குக் காரணமென்பது கருத்து. அதனால் பிர்ம்மத்திற்குத் தடஸ்த லட்சணம் கூறப்பட்டது. ஆனந்தகனம் முதலிய பதங்களால் சொரூப இலட்சணம் சொல்லப்பட்டது. பூமாலையில் ஆரோபிக்கப்படும் சர்ப்பம்போல் உலகமானது நசிக்கிறதென்று சொல்லப்பட்டபடியால் பிர்மஞானத்திற்கு அஞ்ஞான நிவர்த்தியென்கிற மோக்ஷம் பிரயோசனமென்று கூறப்பட்டது.

பிர்ம்மத்தின் உண்மையான சொரூபத்தை யறிந்தவர்களுக்கு மேற்கூறிய மூவுலகங்களும் பூமாலையில் அத்தியாசத்தினால் ஏற்படும் அரவம் பொய்யாவதுபோல் பொய்யெனக் காணப்படு கின்றனவோ அப்படிப்பட்டதும் ஆனந்த கனமானதும் மாயாசம் பந்தமாகிய களங்கமற்றதும் ஸ்வப்ரகாசமுள்ளதுமான ஒரு ஜோதி யை அதாவது குணாதீதமான பிர்மத்தை வணங்குவோமாக.

ஸுஷும்நாநாடியில் நிரோதிக்கப்படும் வாயுவினால் பிர்ம்ம ரந்த்ரஸ்தானத்தை அதிக்கிரமித்து நிற்பதும் அந்தக்கரணம் சாந்தியை யடைந்தவிடத்து விளங்குவதும், ஆநந்தகனமா யிருப்பதும் உலகமுழுதும் வியாபித்திருப்பதுமான (1) பிரத்யக் ஜோதியானது, யோகியான அர்த்தசந்திரதாரியி (பரமசிவ) னுடைய ஸ்பஷ்டமான நெற்றிக்கண்ணாகிய வியாஜத்தால் வெளிப் படுத்தப் படுவதுபோல் விளங்குகிறது.

(நாந்தி முடிவில்)

(2) ஸூத்ரதாரன்:—போதும்; அதிகமாக விஸ்தரிக்க வேண்டாம்; மற்றத் தேசத்தரசர்களின் கிரீடங்களிலுள்ள இரத்தினங்களி லிருந்து கூட்டம் கூட்டமாக வெளிவரும் காந்திகளால் மங்கள ஆரத்தி எடுக்கப்பட்ட பாதகமலங்க ளுள்ளவரும், மகாபலசாலிகளான பகைவர்களின், கதவுகள் போல் விசாலித்த மார்பினைப் பிளந்து ஸ்ரீ நரசிம்மசுவாமியினுடைய குணத்தை வெளியிட்டவரும் அதிபலசாலிகளான இரா ஜாக்களாகிய பிரளயகால சமுத்திரத்தில் மூழ்கிப்போன இந்தப் புவியை மறுபடியும் மீட்டு, ஸ்ரீ ஆதிவராக

(1) பிரத்தியக்—பிரத்தியக் என்றால் ஜடம் அகங்காரம் இவைகளுக்குப் பிரதிகூலமாய் அதாவது எதிரிடையாய்ப் பிரவர்த்திப் பது. அப்படிப்பட்டஆத்மா சுயம்பிரகாச சொரூபியான பரமான்மா வென்பது கருத்து.

(2) ஸூத்ரதாரன்—நாடகக்கதையைச் சரியாய் நடக்கச்செய்பவன் அதாவது நாடகாபிநயத்துக்கு அதிபதி.

சுவாமியின் பராக்ரமத்தை விளக்கினவரும்(க) திக்குகளாகிய மாதர்களுடைய செவிகளில் ஆபரணமாக விளங்கும் கீர்த்தியாகிய கொடியின் துளிருள்ளவரும் திக்கஜங்கள் செவியை வீசுவதால் உண்டாகும் காற்றால் விருத்தியடையும் பிரதாபமென்னும் அக்கினியை உடையவருமான ஸ்ரீ கோபாலராகிய பிரபு எனக்கு உத்தரவளித் திருக்கிறார்.

அதாவது:—

"நமக்கு ஜனனகால முதல் நண்பராக இருந்து வரும் கீர்த்திவர்ம மகாராஜாவின் திக்விஜயத்தினால் நமது பிர்மானந்த ரஸமெல்லாம் மறைந்துபோய், நம்முடைய நாட்களெல்லாம் அநேகவிதமான விஷய சுகங்களை யனுபவிப்பதில் வீணாயின. இப்பொழுது நாம் செய்யவேண்டிய வேலையைச் செய்து முடித்து விட்டபடியால், கவலையற்றிருக்கிறோம். ஏனெனில், நமது அரசனது பகைவர்களாகிய மற்ற அரசர்களை நாசஞ் செய்துவிட்டோம். நற்கீர்த்தி வாய்ந்த அமைச்சர்களை ஏற்படுத்தி நமது இராஜ்யத்துக்குத் தக்க காவலை அமைத்துவிட்டோம். நான்கு கடல்களால் சூழப்பட்ட இப்புவியிலுள்ள அரசர்களும் கொண்டாடத்தக்க சக்ரவர்த்தித் தன்மையை நமது கீர்த்திவர்ம மகாராஜனுக்கு அளித்து விட்டோம். ஆகையால் நாமிப்பொழுது (1) சாந்திரஸத்தை அபிநயித்துக்காட்டப் பார்த்து நமதுமனதுக்கு மகிழ்ச்சியைத்தர விரும்புகிறோம்.

ஆகையால், நம்முடைய ஆசிரியரும் மிகவும் பூஜ்யருமான ஸ்ரீ கிருஷ்ணமிசிரர் என்கிற பெரியவர் "பிரபோத சந்திரோதய" மென்னும் நாடகத்தை இயற்றி உன்னுடைய கையில் கொடுத்திருந்தனரே? அதை இப்போது கீர்த்திவர்ம

(1) எந்த ரஸத்தை அபிநயிக்கையில் பார்த்தாலும் கேட்டாலும் மனதுக்கு விஷயங்களிலுள்ள பற்றுதல் குறைந்து அக்காலத்திலாவது ஒழிவு உண்டாகுமோ அதற்குச் சாந்திரஸ மென்று பெயர்.

மகாராஜாவுக்குமுன் நீ அபிநயித்துக் காட்டவேண்டும். அரசனுக்குத் தன்னுடைய சபையிலுள்ளவர்களுடன் அந்த நாடகத்தைப் பார்க்கப் பிரியமிருக்கின்றது" என்ற இவ்வுத்தரவு கொடுக்கப்பட்டிருக்கிறது. ஆகையினால் வீட்டிற்குச் சென்று என் மனைவியை அழைத்துக்கொண்டு வந்து மேளத்தைத் தயார்செய்கிறேன். (சிறிதுதூரம் நடந்து திரையைப்பார்த்து) (5) ஆர்யே! இங்குவா !

(6) நடி. பிரவேசிக்கிருள்.

நடி:—சுவாமி! இதோ இருக்கின்றேன். எந்த உத்தரவை அனுஷ்டிக்கவேண்டுமோ (7) அதை ஆரிய புத்திரர் ஆக்ஞாபிக்க வேண்டும்.

ஸூத்ரதாரன்:—ஆர்யே! இது உனக்குத் தெரிந்த விஷயந்தான். பகைவர்களுடைய சேனைகளாகிய வனங்களில் விருத்தியடைந்த பிரதாபமென்னும் தீயின் ஜ்வாலையை மூவுலகங்களிலும் வியாபிக்கச் செய்தவரும், உலகம்புகழத்தக்க கீர்த்திவாய்ந்தவருமான கோபாலரென்பவர் கொடிபோன்ற கத்தியை மட்டும் உதவியாகக் கொண்டு சத்ரு அரசர்கள் யாவரையும் ஜயித்து, அரசர்களுக்கெல்லாம் திலகம் போல் விளங்கும் ஸ்ரீ கீர்த்திவர்ம மகாராஜனுக்குச் சக்ரவர்த்தித் தன்மையை யளித்துப் பட்டாபிஷேகமுஞ் செய்து வைத்தார். மிகக்கொழுப்புள்ள இராக்கதஸ்திரீகள் கைகொட்டுங்கால் அக்கைகளில் அலங்காரமாக அணியப்பெற்றிருக்கும் மணிகளுடைய மண்டையோடுகள் ஒன்றோடொன்று மோதுவதாலுண்டாகும் ஒலியாகிய தாளங்களைக் கேட்டு நர்த்தனஞ் செய்யும் பிசாசுகளுள்ள போர்க்களங்கள், பருவத சிகரங்கள்

(5) நாடகசாஸ்திரப்படி ஸூத்ரதாரன் தன் மனைவியை ஆர்யே என்று அழைப்பான்.

(6) நடி-ஸூத்ரதாரன் மனைவி.

(7) நாடகசாஸ்திரப்படி எல்லா ஸ்திரீகளும் தங்கள் கணவனை ஆரிய புத்திர என அழைப்பார்கள்.

போன்ற யானைகளின் மத்தகங்களிலுள்ள குகைபோன்ற துவாரங்களில் மோதும் பெருங்காற்றினால் உண்டாகும் நாதங்களைக்கொண்டு அந்தக்கோபாலருடையகீர்த்தியை இன்னமும் பாடுகின்றன. சாந்திமார்க்கத்திற்குச் செல்பவரான அந்தக் கோபாலர் தமது மனதுக்குக் குதூகலம் உண்டுபண்ணும் "பிரபோதசந்திரோதயம்" என்னும் நாடகத்தை அபிநயித்துக் காட்டும்படி எனக்கு உத்தரவளித்திருக்கின்றனர் ஆதலால் நடர்கள் வேடம் புனைந்துகொள்ளத் தயாராயிருக்கட்டும்.

நடி:—ஆர்யபுத்திர ! இது மிகவும் ஆச்சரியம் ! ஏனெனில் கர்ணபரியந்தம் நாணேற்றப்பட்ட கடினமான வில்லிலிருந்து விடுபடும் அம்புக்கூட்டங்களால் சிதறியடிக்கப் பட்ட குதிரைகளை அலைகளாகக் கொண்டதும், ஓயாமல் விடப்பட்ட கூர்மையான பாணங்களால் சேதிக்கப் பட்டதும், அஸ்திரங்களினால் அடியுண்டதுமான ஆயிரக்கணக்கான உயர்ந்தயானைகளை மலைகளாக உடையதும், சுற்றுகிற கையாகிற மந்தரபருவதத்தினால் கலக்கப்படுகிற காலாட்படைகளை ஜலக்குவியலாக உடையதுமான கர்ணமஹாராஜனுடைய சேனையாகிய கடலை, அரசக் கூட்டங்களைத் தம்முடைய புஜபலபராக்ரமத்தினால் நடுங்கச்செய்து ஸ்ரீ மகாவிஷ்ணு பாற்கடலைக் கடைந்ததுபோல் கடைந்து ஜயலக்ஷ்மியை அடைந்தவரான கோபாலர் சகலமுனிவரும் புகழ்ந்து மகிழ இப்பொழுது உபசாந்தியை யடைந்தது மிகவும் ஆச்சரியந்தான்!

ஸூத்ரதாரன்:—ஆர்யே ! பிர்ம்ம தேஜஸானது எப்போதும் குளிர்ந்த சுபாவமுள்ளது தான். ஏதேனும் ஓர் காரணம் பற்றி மாறுதலடைந்திருப்பினும் அது மறுபடியும் தன் நிலைமைக்கு வந்துவிடும். ஏனெனில், இராஜக்கூட்டங்களுக்குப் பிரளயகாலாக்நி ருத்திரன்போன்றவனை சேதிதேசமன்னனால் அடியோடு அழிக்கப்பட்ட சந்திரவம்சத்தரசர்களின் அரசுரிமையை மறுபடியும் நிலைநாட்டுவதற்காக, இந்த

கோபாலருக்கு இத்தகைய வீராவேசம் உண்டாயிருந்தது. ஆர்யே! இதைக்கவனித்துப்பார்! சமுத்திரமானது, பிரளயகாலத்தில் பிரசண்டமாருதத்தினிடையகப்பட்டுப் பருவதங்களையெல்லாங்கடந்து சென்றதாயினும், இப்பொழுது அச்சமுத்திரம் அதன் சுபாவகுணங்களாகிய தெளிவு, சலனமடையாமை முதலியவைகளையுடையதாய்ப், பிரளயகாலத்திற்கு முன்னிருந்தது போலவே இருக்கின்றதன்றோ?

ஸ்ரீமந்நாராயணனுடைய அம்சத்திலிருந்து உண்டானவர்களும் பராக்ரமத்தையே அலங்காரமாக அடைந்தவர்களுமான மகாபுருஷர்கள் உலகக்ஷேமத்தின் பொருட்டுப் பூபாரத்தைக் குறைத்துச் செய்யவேண்டிய காரியங்களைச் செய்த பின்னர், சாந்தியையே அடைகின்றனர். பரசுராமரையே நீ இதற்குதாரணமாகக் கொள்ளலாம்.

இருபத்தொரு முறை அநேக அரசர்களுடைய ஜலனீர் மாமிசம், கொழுப்பு, இவைகளாகிய சேறுபடி கலந்து மிகுதியும் பெருகுகிற இரத்தநதியில் மூழ்கினதும், அரசர்களுடைய உயர்ந்த தோள்களை வெட்டும்பொழுது சப்திக்கும் கோரமான முனையையுடையதும், மாதர்கள், குழந்தைகள், வயோதிகர்கள் முதலியவர்களைக் கொல்வதில் தயைபற்றதென்று பிரசித்திபெற்றதுமான கோடரியை யுடைய பரசுராமர் இராஜாக்களின் கூட்டத்தை யொழித்துப் பூபாரத்தைப் போக்கி, கோபாக்கினிதணிந்து தவத்தில் கண்ணியம்பெற்றுச் சாந்தி யடைந்திருக்கிறார். அதுபோல் கோபாலரும் மிக்க சாந்தியை யடைந்திருக்கிறார். எங்ஙனமெனில், (1) விவேகமானது (2)மோகத்தை வென்று (3) பிரபோதத்தை உண்டு

(1) விவேகம்- இது நன்மை தீமை யென்று பகுத்தறியும் தன்மை.

(2) மோகம்-வஸ்துவல்லாததை வஸ்துவென்று நினைத்[illegible]வது சம்சாரத்திற்கு மூலகாரணம்.

(3) பிரபோதம்- ஞானம், வேதாந்த சிரவணாதிகளால் ஆத்மாவில் உண்டாகும் மாயையொழிதல்; அதனால் சம்சாரத்திற்கு அழிவுண்டாம்.

பண்ணுவதுபோல் இந்தக்கோபாலர் கர்ணனென்று கீர்த்தி வர்மராஜனுக்கு பிரகாசத்தை (க்ஷேமத்தை) யுண்டாக்கிறார்.

(திரைக்குள்)

...டோரி! அற்பக்கூத்தாடி!! நாங்கள் உயிரோடிருக்கையில் எங்கள் பிரபு மகாமோகர் விவேகனிடம் அபஜயமடைந்ததாகக் கூறுகின்றாய்.

ஸூத்திரதாரன்:—[பரபரப்புடன் பார்த்து] ஆர்யே! இங்குவா! உயர்ந்திருந்த இரண்டு கொங்கைகளையுடைய இரதி தன்கையால் மயிர்க்குச்செறிய அணைந்து கொள்ளப்பட்டவனும் மதத்தினால் சுழன்று கொண்டிருக்கும் தாமரைமலர் போன்ற கண்களையுடையவனும் உலகங்களுக்கு மதத்தை யுண்டாக்குகிறவனும் கண்களுக்கு ஆனந்தத்தைக் கொடுப்பவனுமான காமன் இதோவருகின்றான். என் வார்த்தையில் அவன் கோபமடைந்தனன்போலும்! ஆகையால் நாம் இந்த இடத்தைவிட்டு விலகிப் போவதே நலம்.

[போகிறார்கள்]

(4) பிரஸ்தாவனை முற்றிற்று.

---

**(4)** பிரஸ்தாவனை யென்பது நாடகத்தை ஆரம்பிக்குமுன், நாடகபாத்திரங்கள் செய்து கொள்ளும் ஏற்பாடுகளடங்கிய சம்வாதம்.

(1)காமனும் (2)இரதியும்

(பிரவேசிக்கிறார்கள்)

காமன்:—(கோபத்துடன் அடேபாவி! என்று, முன் திரைமறைவி லிருந்து கூறியபடி கூறிக்கொண்டு,) அடே அற்பக்கூத் தாடியே! ஜனங்கள் எவ்வளவு கல்விமான்களாயிருந்தா லும் நீலோத்பலம்போன்ற கண்களையுடைய அழகான மாதர்களின் பார்வையாகிற பாணங்கள் எதுவரையில் அவர் கள் மேல் விழுவதில்லையோ அதுவரையிற்றான் சாஸ்தி ரங்களாலுண்டான விவேகமானது அவர்கள் மனதிற் பிரகா சிக்கும். இதுவன்றி, அழகான உப்பரிகை, யௌவன ஸ்திரீகள், வண்டுகளின்சப்தங்கள், அன்று அலர்ந்த அழ கான மல்லிகை மலர்களுடன் விளங்கும் கொடிகள், நல்ல வாசனை வீசுகிற தென்றல், சந்திரனோடு கூடிய இரவு இவைகளாகிற என்னுடைய ஆயுதங்கள் ஒருநாளும் வீணு காமல் சர்வஜிலாக்கியமாக விளங்கி வருகையில், விவேகத்தின் தன்மை தோன்றுவதெங்ஙனம்? பிரபோதந்தான் எங்ஙனம் உண்டாகும்? கஷ்டம்!

இரதி:—ஆர்யபுத்திர! நமது மகாமோக மகாராஜனுக்கு விவேக னென்பவன் பெரும் பகைவனென்றெண்ணுகிறேன்.

காமன்:—அன்பிற்குரியவளே! ஸ்திரீகளுக்கு இயற்கையில் உண் டாகக்கூடிய பயமானது விவேகத்தினிடமிருந்து உனக்கும் எப்படியோவந்து விட்டதே! பார்—

எனக்கேற்பட்ட வில்லும் அம்புகளும் மலர்களேயாயி னும் தேவாசுரர்களோடு கூடிய இவ்வுலகம் முழுமையும் என்கட்டளையை மீறி ஒருகணநேரமேனும் தைரியம் கொள்வ தில்லை. உதாரணமாக—

---

(1)காமன்—என்றால் ப்ரீதி, ஆசை; (2) இரதி என்றால் புருஷனுக்கு ஸ்திரீகளிடத்திலும் ஸ்திரீகளுக்குப் புருஷர்களிடத்திலும் உண்டாகும் அன்பு.

சகல தேவர்களுக்கும் அரசனான இந்திரன் அகலி கைக்குச் சோரநாயகனானான். சகல பிரஜைகளையும் சிரு ஷ்டிக்கும் பிரமன் தன் சொந்தப்பெண்ணை (சதரூபை யென்பவளை) அடைந்தான். சந்திரன் தன் குருவாகிய பிரகஸ் பதியின் பத்தினியை அடைந்தான். இவ்விதம் யான் யாரைத்தான் துன்மார்க்கத்தில் பிரவேசிக்கும்படி செய்ய வில்லை. உலகங்களை நாசம்செய்வதில் என்பாணம் சோர்வடை வது முண்டோ?

இரதி:—ஆர்யபுத்திர! இது அப்படியல்ல; அதிபலமானசகாயத்தை யடைந்திருக்கிற சத்ருவைப்பற்றிச் சிறிது யோசிக்கவேண்டி யதுதான். ஏனெனில் யமம் நியமம் முதலான மகாபல சாலிகளான மந்திரிகள் அந்த விவேகனுக்கிருப்பதாகக் கேள் விப்படுகிறேன்.

காமன்:—ஆசைக்கிசைந்தநாயகியே! விவேகனுடைய பலிஷ்டர்க ளான யமம் நியமம் முதலிய எட்டு அமைச்சர்களும் நாம் எதிர்ப்பதற்கு முன்னமேயே ஓடிவிடுவார்கள். தவிர—

கோபத்திற்கு முன் அஹிம்ஸை நிற்பதெங்ஙனம்? பிரம சரியம் முதலானவைகள் எனக்கு எதிரில் நிற்பதெங்ஙனம்? ஸத்யம், திருடாமை, வாங்காமை இவைகள் லோபத்திற்கு முன் நிற்பதெங்ஙனம்?

1 யமம். (2) நியமம். 3 ஆசனம் 4 பிராணாயாமம் 5 பிரத் தியாஹாரம் 6 தியானம் 7 தாரணம் 8 சமாதி இவைகள் யாவும் நிர்விகார மனதுக்குமட்டு மெட்டக்கூடிய வைகளாகையால், எனிதில் நாசம் செய்யக்கூடியவைகளோ? மேலும் மாதர்கள் தான் அவர்களுக்கு மாரக தேவதைகள். ஆகையால் நம்மால் அடக்கக் கூடியவர்களே! ஏனெனில்—

(1) தேக சேஷ்டையை யடக்குதல் (2) மனதை யடக்குதல் (3) பத் மாஸனம் முதலியன 4 பிராணவாயுவை ஸுஷும்நா நாடியில் அட க்குதல் 5 மனம் முதலிய புலன்களை விஷயாதிகளிலிருந்து இழுத் தல் 6 ஆத்ம சிந்தை 7 ஆத்ம சிந்தையைக் கொஞ்சகாலம் ஆராய்தல் 8 எப்பொழுதும் தியானத்திலேயே யிருத்தல்.

ஸ்திரீகளுடைய பார்வை சம்பாஷணை விளையாட்டு கிரீடை பரிகாசம் ஆலிங்கனம் இவைகளிருக்கட்டும்; ஸ்திரீகளைச் சிந்திப்பதொன்றே இவ்வுலகத்தில் மனோவிகாரத்தையுண்டுபண்ணுவதற்குப் போதுமானது.

மேலும் விவேகனாகிய அரசனுக்கு மந்திரிகளான இவர்கள் (யமாதிகள்) நமது மகாமோகராஜனுக்கு இஷ்டர்களாகிய மதம் மாற்சரியம் டம்பம் லோபம் இவர்களால் எதிர்க்கப் பட்டவுடன் அதர்மத்தில் பிரவேசித்து விடுவார்கள்.

இரதி:—நாதனே! தங்களுக்கும் விவேகம் சமதமம் முதலியவர்களுக்கும் உற்பத்திஸ்தானம் ஒன்றென்று யான் கேள்விப்பட்டிருக்கிறேன்.

காமன்:—பிரியநாயகியே! அதென்ன? உற்பத்திஸ்தானம் ஒன்றென்கிறாய்; தந்தை மாத்திரந்தான் எங்களுக்கு ஒருவன்; அதாவது—

† பரமாத்மாவுடன் முதல் முதல் ஏற்பட்ட சம்பந்தத்தினால் மாயையினிடம் மனமென்ற பிரசித்தமான ஒரு புத்திரன் பிறந்தனன். அவன் இந்த பூவுலங்களையும் உண்டாக்கிப்பிறகு எங்களுடைய இவ்விரண்டு குலத்தையும் உண்டு பண்ணினான்.

அவனுக்குப் பிரவிர்த்தி, நிவிருத்தி என்கிற இரண்டு தர்ம பத்தினிகள். இவ்விருவர்களுள் பிரவிர்த்தியினிடத்தில் மகாமோகனைப் பிரதானமாகக் கொண்ட குலம் உண்டாயிற்று. நிவிருத்தியினிடம் விவேகனைப் பிரதானமாகக் கொண்ட மற்றொரு குல முண்டாயிற்று.

இரதி:—ஆர்யபுத்திர! சகோதரர்களான உங்களுக்கு இப்படிப்பட்ட பகைமை யேற்பட்டதற்குக் காரணம் யாது?

காமன்:—பிரியே! சகோதரர்களுக்குள்ளும் ஒரே பொருளை அடைய விரும்பினால், விரோதம் ஏற்படுமென்பது உலகப் பிரசித்தமன்றோ? பூமியை அடைவதன் பொருட்டுக் கௌரவர்களுக்கும் பாண்டவர்களுக்கும் உலகமழியத்தக்க கடுமையான விரோதமுண்டாயிற்றன்றோ?

இவ்வுலகமுழுவதும் எங்கள் தந்தையால் சம்பாதிக்கப்பட்டது. நாங்கள் (மகாமோகாதிகள்) எங்கள் தந்தைக்கு அன்புடையவர்களாகையால் நாங்களே அதைக் கைப்பற்றிக் கொண்டோம். அவர்களுக்குச் சஞ்சாரம் மிகக் குறைவு. ஆகையால் அந்தப் பாவிகள் தகப்பனை (மனதை)யும் எங்களையும் தொலைக்க யத்தனம் செய்திருக்கிறார்கள்.

இரதி:—பிராணநாத! பாவம் ஒழிந்தது! விரோதத்தினால் மட்டும் இத்தகைய பாவஞ்செய்ய அவர்கள் ஆரம்பித்திருக்கின்றனரா? இருக்கட்டும்; இதற்கு அவர்கள் ஆலோசித்திருக்கும் உபாயங்களென்ன?

காமன்:—பிரியே! இவ்விஷயத்தில் இரகசியமான காரணம் ஒன்றிருக்கின்றது.

இரதி.—ஆர்யபுத்திர! அதை எனக்கு ஏனோ வெளியிடக்கூடாது?

காமன்:—பிரியே! பெண்களின் இயற்கை சுபாவப்படி நீபயமுடையவளெனக் கருதி, அந்த மாபாவிகளின் செய்கையை நின்னிடத்து வெளியிட வில்லை!

இரதி:—(பயத்துடன்) நாயகா ஆ! ஆ! அது எத்தன்மையது?

காமன்:—நாயகியே! நீ சிறிதும் அஞ்சவேண்டாம்! அஞ்சவேண்டாம்!! மூடர்களுக்கு இது ஆசைமாத்திரமேயொழிய வேறில்லை. ஜனங்கள் இவ்விதம் கூறுகிறார்கள். நமது குலத்தில் வித்தை (ஆத்மதத்வசாக்ஷாத்காரம்) என்கிற ஒரு இராக்கதமாது பாரகதேவதைபோல்உண்டாகப்போகின்றாள் என்று.

இரதி:—(தேகம் நடுங்குகிறது) ஆ! கஷ்டம்! கஷ்டம்!! நெஞ்சம் பதைக்கின்றதே. நம்முடைய குலத்தில் எப்படி இராக்ஷஸஸ்திரீயுண்டாகக்கூடும்?

காமன்:—பிரியே! நீ சிறிதும் அஞ்சவேண்டாம்! ஜனங்கள் இவ்விதஞ் கூறுகிறார்களே அதுதான்; வேறல்ல.

இரதி:—அந்த இராக்ஷஸி யாதுசெய்யப் போகின்றனள்?

காமன்:—பிரியே! பிரமதேவன் வாக்கொன்று இங்ஙன மிருக்கின்றதாம்.

"சம்பந்தமேயில்லாத ஓர் புருஷனுக்கு மாயையென்கிற ஓர் மனைவியாம். அவளை அந்தப் புருஷன் தொடாமலிருந்தும் அவள் மனம் என்கிற ஓர் பிள்ளையைப் பெற்றுப் பிறகு கொஞ்சம் கொஞ்சமாக இவ்வுலகங்களையுமீன்றனளாம். அந்த மனத்தினிடமிருந்து வித்தை என்கிற ஓர் பெண் பிறக்கப் போகின்றனளாம். அவளுக்குத் தன் தந்தை, சகோதரர்கள், தாய் இவர்களெல்லாம் சேர்ந்த குலமே பக்ஷிக்கத்தக்கதாகப் போகின்றதாம்."

இரதி:—(பயத்தினுற்றேகம் நடுங்குகிருள்) ஆர்யபுத்திர! காப்பாற்ற வேண்டும்! காப்பாற்றவேண்டும்!! (பர்த்தாவைக் கட்டிக்கொண்ருகிருள்.)

காமன்:—[நாயகி தன்னை யணைந்துகொண்டதினுல் உண்டான சுகத்தை அபிநயித்துக் காட்டுகிருன்] (தனக்குள்,) அதிக சஞ்சலமானகருத்தவிழிகளுள்ள எனது ஆசைநாயகி, தான் அடைந்தஅச்சத்தினுல்மிகவும்நடுங்குகிற தன் இருகொங்கைகளும் என்னுகம் பொருந்தவும் இரத்தினமயமான கங்கணங்கள் சப்திக்கவும் என்னைத் தழுவிக்கொண்ட தானது எனக்கு மயிர்க்குச்சலை யுண்டாக்கி ஆநந்தத்தை யளித்ததுமன்றி, என் தேகந்தெரியாத மோகத்தையும் உண்டாக்குகிறதே!

[தானும் அவளை இறுகத்தழுவுகிருன்]

(வெளிப்படையாய்) பயப்படாதே! பயப்படாதே!! நாம் உயிருடனிருக்கிற வரையில் வித்தை உண்டாவது எங்ஙனம்?

இரதி:—நாதா! இப்படிப்பட்ட இராக்ஷஸி உண்டாகப்போவதில் தங்கள் பகைவர்களுக்குச் சம்மதந்தானு?

காமன்:—ஆம்! விவேகனுக்கு உபநிஷத் தேவியி னிடத்தில் "ப்ரபோதசந்திரன்" என்னும் சகோதரனுடன் அவள் உண்டாகத்தக்கவளென்று பிரசித்தமாக சொல்லப்படுகிறது. அந்த விஷயத்தில் சமம் தமம் முதலியவர்கள் முயற்சி செய்து வருகின்றனர்கள்.

இரதி:—ஆர்யபுத்ர! தங்களுக்கே கேட்டை யுண்டுபண்ணக் கூடிய அந்த வித்தை உற்பத்தியாவதைப்பற்றி எங்ஙனம் அந்த மூடர்கள் புகழ்கிறார்கள்?

காமன்:—பிரியே! குலத்தை யழிக்கப் புறப்பட்ட பாவிகளுக்கு, தான் பிறர் என்கிற வித்தியாசமான எண்ணம் ஏது? கேள்:—

இயற்கையிலேயே மலினமும் கோணலுமான எண்ண முடையவர்களுடைய உற்பத்தியானது தனக்கும் தன்னை யுண்டுபண்ணின வஸ்துவுக்கும் கேட்டை விளைக்கக் காரணமாகும். ஆர்யே! திருஷ்டாந்தமாக, புகையானது, மேக மார்க்கத்திற்குப் போய்ச்சேர்ந்து மழையினால் நெருப்பை நாசம் பண்ணிப் பிறகு தானும் நாசமடைகிறது போலாம்.

(திரைக்குள்) அடே! பாபி! துஷ்டா! எங்களைப் பாபிகளென்று தூஷிக்கிறாயா? அடே! கேள், "குருவாயிருந்தாலும் கொழுப்பையடைந்து, இது தகும் இது தகாது என்பதையறியாமல் கெட்ட வழியிற் சென்றால் அவனை நீக்கி விடவேண்டும்" என்று புராணிகர்புராணம்போதிப்பதைக் கூறுகிறார்கள். அகங்காரங் கொண்டநம்முடைய தகப்பன்லோகநாதனாகிய தன்னுடையபிதாவையே கட்டிவிட்டான். இக்கட்டைமஹாமோகாதிகள் நன்றாகஇறுக்கினார்கள்.

காமன்:—(சுற்றுமுற்றும் பார்த்து) பிரியே! நமது வம்சத்தில் பெரியவனாகிய விவேகன், மதியுடன் இங்குவருகிறான்.

இரஸிக, ஜனங்களிடத்திலிருக்கும் இராகம் முதலானவர்களால் பயமுறுத்தப்பட்டவன்போல், இளைத்த சரீரமுள்ளவனும் மானத்தையே பொருளென மதிப்பவனுமாகிய இவன் கலக்கமடைந்த மதி (புத்தி) யுடன், கபம்பனியால் மறைக்கப்பட்டசந்திரன்போல் பிரகாசிக்கிறான். ஆகையால் நாமிங்கிருப்பது உசிதமல்ல. போவோம். [போகிறார்கள்

விஷ்கம்பம்

முற்றிற்று.



விவேகராஜனும் மதியும்

பிரவேசிக்கிறார்கள்.

அரசன்:—(சற்று ஆலோசித்து) பிரியே! கேவியுற்றனையா இந்தக் காமன் கொழுப்பினால் சொன்னவார்த்தைகளை! நம்மையே பாபிகளெனத் தூஷிக்கின்றான்.

மதி:—ஆர்யபுத்திர! ஜனங்களுக்குத் தங்கள் குற்றந்தெரியுமோ?

அரசன்:— எனதன் பிற்குரிய இன்பநாயகியே! பார்!—

துஷ்டர்களும் பாபிகளும் வஞ்சகர்களும் அகங்காரங் கொண்டவர்களுமாயிருக்கிற இந்த மதம் முதலானவர்கள் சிதாநந்த சொரூபியும் நிரஞ்சனனுமான ஜகத்பிரபுவை வெகுகாலமாக பந்தத்துக்குள்ளாக்கி, மிகக்கேவலமானதசைக்குக்கொண்டுவந்து விட்டார்கள்.

இவர்கள் புண்ணியம் செய்பவர்களாம்! என்னே ஆச்சரியமிது! நாம் பாவிகளாம்! நன்று! நன்று!! துஷ்டர்களுக்கு ஜயம்! ஆச்சரியம்!

---

விஷ்கம்பம் என்றால் அங்கத்தின் ஆரம்பத்தில் நடந்தவைகளும் நடக்கப்போகிறவைகளுமான கதைகளைச் சிறிது கீழ்ப்பட்ட பாத்திரங்களைக்கொண்டு காட்டுவது.

மதி:—நாதா! இந்தப் பரமேசுவரன் இயற்கையிலேயேயுள்ள ஆநந்தத்திஞல் அழகான சுபாவமுள்ளவரென்றும், எப்போதும் பிரகாசிக்கிற வஸ்துவென்றும் மூவுலகங்களிலும் தடையறச் சஞ்சரிப்பவரென்றும் கேள்விப்படுகிறேமல்லவா? இப்படியிருக்க, இந்தத் துஷ்டப்பயல்கள் அவரை எப்படிக் கட்டுப்படுத்தி மகாமோகமென்கிற கடலில் மூழ்கச் செய்தார்கள்.

அரசன்:—பிரியே! மாருத தைரியம் படைத்தவஞனலும் மிகவும் பொறுமையுள்ளவஞனலும் குறைவற்ற சுகமுடையவஞனலும் நியாயாநியாயங்களை உணர்ந்தவஞனலும் பரிசுத்தமான அந்தக்கரணமுள்ளவஞனலும், எல்லாராலும் புகழத்தக்க புத்தியையுடையவஞனலும் ஒரு மனிதனுடைய மனமானது ஸ்திரீகளுடைய வஞ்சனைக்குட்படுமாயின், அவனுடைய தைரியமுதல் யாவும் அவனைவிட்டு விலகிவிடும். அதனுற்ருன் பரமேசுவரன் மாயாசம்பந்தத்திஞல் தாஞகவே புருஷனெனப் பேர்பெற்றிருக்கிருர்.

மதி:—மகாதேஜஸுக்கு இருப்பிடமாக விளங்கும் பரமேசுவரனுக்கு மாயாசம்பந்தத்தால், தாழ்ந்த ஸ்திதி ஏற்படுவதென்பதானது, சூரியனுக்கு இருட்டின் ஒரு இரேகையால், மறைவு ஏற்பட்டதென்பது போலிருக்கின்றது.

அரசன்:—பிரியே! (பிரம்ம) பரியாலோசனையில்லாத காலத்தில் ஏற்பட்டதான இந்த மாயை, வேசியானவள் தன்னிடம் உண்மையில் ஏற்படாத விரகவேதனை முதலியவைகளைக் காட்டி, ஆடவனை வஞ்சிப்பதுபோல், உண்மையிலேயே அசத்தான பதார்த்தங்களைச் சத்தாகக் காட்டி புருடனுகிய ஆத்மாவை வஞ்சிக்கின்றனள்.

ஸ்படிகமணிபோல் விளங்குபவரும் விகாரமற்றவருமான பரமாத்மாவை மிகவும் துஷ்டையாகிய இந்த மாயை அதிகமான விகாரத்திற்குள்ளாக்கிவிட்டாள். ஆஞல் அந்தத் துஷ்

டையின் சம்பந்தத்தால் அந்தப்பரமாத்வுக்குச் சிறிதும் ஒளி குறைவதில்லை. ஆயினும் அவளுக்குத் தன்னிச்சைக் கிசைந்தவாறு அவரை நடக்கச் செய்யச் சாமர்த்தியமுண்டு.

மதி:—நாதா! மகா மகிமையுள்ள அந்த ஈசுவரனை அந்தத் துஷ்டையானவள் அவ்வளவு தூரம் வஞ்சிப்பதற்குக் காரணம் யாது?

அரசன்:—யாதேனும் ஓர் பிரயோசனம் கருதியோ அல்லது ஒரு காரணத்தை முன்னிட்டோ மாயை பிரவர்த்திப்பதில்லை. பெண்டிரென்னும் பேய்களின் சுவபாவம் இதுவே! பார்—

அழகான பார்வையுள்ள மாதர்கள் தமை பொருந்திய ஆடவர்களுடைய மனதினுட் புகுந்து மோகமடையச் செய்கின்றார்கள். கொழுப் புண்டாகச்செய்கின்றார்கள். பரிகாசஞ்செய்கின்றார்கள் அதட்டுகின்றார்கள். ஆனந்தப்படுத்துகின்றார்கள். துக்கிக்கச்செய்கின்றார்கள். இன்னும் என்னென்ன காரியக்களைத்தான் செய்யமாட்டார்கள்! மற்றொரு காரணமுமுண்டு.

மதி:—நாதா! அக்காரணம் யாதாம்?

அரசன்:—ஆர்யே! இந்தத் துஷ்டை, "யானோ யௌவனங்கடந்து வயோதிகப் பருவமடைந்து கிழவியாய் விட்டேன். இவரோ வெகு காலத்துப் புருடன். இயற்கையிலேயே விஷயரஸங்களிற் பற்றற்றவர். ஆதலின் நமது பிள்ளையையே அந்தப் பரமேசுவரனுடைய ஸ்தானத்தில் வைத்துவிடவேண்டும்," என்று இங்ஙனம் சிந்திக்கலானாள். இப்படித் தன் தாயார் சிந்தித்ததையறிந்ததும் மனமாகிய புத்திரன் எப்போதும் அவருக்குச் சமீபத்திலேயே யிருப்பதால், தானும் அவரது சொரூபமடைந்தவன்போல், ஒன்பதுவாயில்களுள்ள நகரத்தை யுண்டுபண்ணிக்கொண்டு, (ஈசுவரன்) ஏகனாலும் பலவாறாகப் பிரிந்ததுபோல் அவரை அவைகளொவ்வொன்றிலும் ஸ்தாபித்து விட்டான். பிறகு இரத்தினத்திற்குள் நமது செய்கையை அமைப்பது போல், தான் செய்யும் காரியத்தை அவரிடம் சுமத்தி வருகிறான்.

மதி:—(சற்று ஆலோசித்து) ஆரியபுத்திரா! "தாயைப்போற்பிள்ளை" என்பதை அனுசரித்தே பிறந்திருக்கின்றான்.

அரசன்:—பிரியே! பிறகு அந்த ஈசுவரன் மனதின் மூத்தபிள்ளையாகிய அகங்கார னென்கிற பேரால் கட்டுண்டான். பிறகு—ஈசுவரன்மனதின் கற்பனாரூபமான அவித்தை யென்கிற ஓர் வித நித்திரையைப்பெற்று மயங்கி, "நான்பிறந்தேன் எனக்கிவன் தந்தை, இவள் தாய், இது பூமி, இவள் மனைவி இது குலம், இவர்கள் புத்திரர்கள், இவன் சினேகிதன், இர்வகள்சத்ருக்கள், இது பொருள், இது பலம், இவை வித்தைகள் இவர்கள் நண்பர்கள், இவர்கள் உறவினர்கள்" என்றிவ் விதமான பலவித சொப்பனங்களைக் காண்கிறான்.

மதி:-ஆரிய புத்திர! இவ்வித நீண்ட நித்திரையால் ஞானத்தை அடித்து விரட்டியபின் அந்தப் பரமேசுவரனிடத்தில் பிரபோத மென்பது உண்டாவதெங்ஙனம்?

(அரசன் வெட்கத்தினால் தலைகுனிந்து நிற்கிறான்.

மதி:—ஆரியபுத்திர! வெட்கமென்னும் பாரத்திற் காற்றாது தலைகுனிந்து நிற்பானேன்? பதிற் சொல்ல லாகாதா?

அரசன்: —என் பிரியநாயகியே! அநேகமாக ஸ்திரீகள் பொறாமையுள்ள மனமுடையவர்கள். அதனால் நான் என்னைக் குற்றவாளி யென்றே நினைக்கிறேன்.

மதி:-சுவாமி! தங்களுடைய பர்த்தா ஒரு செய்கையைப் பிரியத்துடன் செய்ய யத்தனிக்கும் போதாவது அல்லது தர்மம் அர்த்தம் இவைகளின் நிமித்தம் ஏற்படும் போதாவது அவருடைய மனதிலுள்ளவைகளைக் கெடுக்கும் பெண்டிர் வேறு. (நான் அப்படிப்பட்டவளல்ல)

அரசன்:—பிரியே! நெடுநாட்பிரிவினால் அருமை யடைந்தவளும் உக்ரமான கோபமுள்ளவளுமான உபநிஷத்தேவியை, சாந்தி முதலானவர்கள் அனுகூலப்படுத்தி என்னோடு சேர்த்துவைக்கப் போகிறார்கள். இவ்விஷயத்தில் நீ எல்லாவற்றையு

மொழித்துச் சிலகாலம் பொறுமையா யிருப்பாயேயாகில்,
ஜாக்கிர, சொப்பன, சுஷுப்தி என்கிற ஸ்தானங்கள்
அற்றுப்போய் விடும். பிறகு பிரபோதமுதயமாகும்.

மதி:—நாதா! இப்படிச் செய்வதால், பெரும் பந்தத்துக்குள்ளான நமது குலப்பிரபு, பந்தத்திலிருந்து விடுபட்டுச் சுகம் பெறக்கூடுமாகில், தாங்கள் அவளுடன் எப்போதும் இடைவிடாமலிருந்து வாழ்வதில் எனக்கு நிரம்பப் பிரியம்.

அரசன்:—பிரியே! நீ இவ்விதம் தெளிந்திருப்பாயாகில் நமது அபீஷ்டங்கள் யாவும் சித்தி யடைந்து விட்டதாகவே கருதலாம். அதாவது-

இவ்வுலகங்களுக் கெல்லாம் ஆதியும் எல்லாவற்றையும் நடத்த வல்லவரும் அழிவற்றவருமான பரமாத்துமா ஏக வஸ்துவே யாயினும் பலவாறாகப் பிரித்து (மூன்று கூறப்பட்ட ஒன்பது வாயில்களுள்ள) பட்டணங்களுள் அடைத்து மிருத்யுவின் ஸ்தான மென்கிற ஸம்ஸாரத்தை யடையும்படி செய்து பிர்ம்மத்திற்குப் பேதத்தையுண்டு பண்ணுகிறவர்களுக்கு (பிர்ம்மஹத்தி செய்தவர்களுக்கு) பிராணனை வாங்குவதென்கிற பிராயச்சித்தத்தைச் செய்வித்து, அந்தப் பிர்ம்மத்திற்கு ஏகத்தன்மையை யுண்டாக்குகிறேன்.

இது இருக்கட்டும்—

ஆரம்பித்த செய்கையை முடிப்பதன் பொருட்டு சமம் முதலானவர்களுக்குக் கட்டளையிடுவோம்.

[மதியும் விவேகனும் போகிறார்கள்.

முதல் அங்கம்

முற்றிற்று.



# இரண்டாவதரங்கம்



டம்பன் பிரவேசிக்கிறன்.

**டம்பன்:**—மகா யோக ராஜன் எனக்கு ஒரு கட்டளையிட்டிருக்கிறர். என்னவெனில் "குழந்தாய் டம்பா! அமைச்சர்களுடன் கூடிய விவேகன் பிரபோதத்தை யுண்டுபண்ணுவதாய் பிரதிக்ஞை செய்திருக்கிறன். தீர்த்தங்கள் தோறும் சமம் தமம் முதலியவர்களை அனுப்பியுமிருக்கிறன். இங்ஙனம் நமது வம்சத்திற்கு உண்டாயிருக்கும் தீங்கானது உங்களால் கவனித்து நிராகரிக்கத்தக்கதாயிருக்கிறது. தீர்த்தங்களில் முக்கியமான வாராணசி, (காசி) இந்த அவனியில் முத்தி க்ஷேத்திரம். ஆகையால் நீ அங்குச் சென்று நான்கு விதமான ஆச்சிரமிகளுக்கும் முத்தி கிடைப்பதரிதாகும்படி இடையூறுகளை யுண்டாக்க வேண்டும்" என்பவைகளே. காசிமா நகரத்தை அநேகமாக நான் வசப்படுத்தி விட்டேன். குறிப்பித்தபடி எஜமானனுடைய உத்தரவும் நிறைவேற்றப்பட்டது. என் வசமான இவர்கள் இப்பொழுது இருக்கும் நிலைமையைக் கூறுகிறேன்.

அதாவது:—

"என்னால் வஞ்சிக்கப்பட்ட துஷ்டர்கள், பிரகாசமான சந்திரனால் விளங்கும் இராமுழுதும் விலைமகளின் வீடுகளுக்குச் சென்று மதுவாசனை வீசும் அவர்களுடைய வாயிலூறும் மதுவைப் பருகி மனமகிழ்ந்து இடைவிடாத மன்மதகிரீடைகளிற் பொழுது போக்கிவிட்டு, பகலில், நாங்கள் எல்லாம் அறிந்தவர்கள், தீக்ஷிதர்கள், வெகு காலமாய் அக்னிஹோத்திரம் செய்பவர்கள், பிரமஞானிகள், தவம் புரிவோர்கள் — — — எனச் சொல்லிக் கொண்டு உலகத்தை வஞ்சிக்கிறர்கள்.

[ஒரு பக்கம் பார்க்கிறன்.

இதோ யாரோ ஒருவழிப்போக்கன் கங்கா நதியைத் தாண்டி இப்போது இந்த இடத்தை நோக்கி வந்துகொண்டிருக்கிறான். இவன் கர்வங்கொண்டவன் போலவும் மூவுலகங்களையும் விழுங்க வல்லமையுள்ளவன் போலவும் தன் பேச்சால் பயமுறுத்துகிறவன் போலவும் அறிவினால் நம்மைப் பரிகாசம் செய்பவன் போலவும் தோன்றுகிறான். ஆகையால் இவன் தென்ராடா நகரத்தைச் சார்ந்தவனாக விருக்கவேண்டுமென்பது நிச்சயம்! அங்ஙனமாயின் இவனிடமிருந்து பெரியவனாகிய அகங்காரனுடைய வரலாற்றை யறிந்து கொள்கிறேன்.

[என்று கூறி நடக்கிறான்.

அகங்காரன் பிரவேசிக்கிறான்.

அகங்காரன்:—ஆச்சரியம்! உலகத்தில் ஜனங்கள் அநேகமாய் மூடர்களாகவேயிருக்கிறார்கள். - - - பிரபாகர குருவினுடைய மதத்தைப்பற்றிக் கேட்டதே கிடையாது. குமாரில பட்டர் இயற்றிய சாஸ்திரத்தை அறிந்தபாடில்லை. சாரிக மென்கிற (மீமாம்சை) சாஸ்திரத்தின் வார்த்தைகளினுடைய ஸாராம்ச ஞானமும் அடைந்தவர்களல்லர். வாசஸ்பதி என்பவர் இயற்றிய (வேதாந்த) கிரந்தத்தை அறிந்துளரோ வென்பதைப் பற்றிச் சொல்லவேண்டுமோ? மகோததியாற் செய்யப்பட்ட குருமத கிரந்தத்தின் இரகசியமும் அறிந்தவர்களல்லர். மகாவிரத மென்கிற பாசுபத சாஸ்திரத்தைப் பார்த்ததும் கிடையாது. (வேத சாஸ்திரங்களிற்பெறப்படும்) வஸ்துவை இன்னதென்று ஆலோசிப்பவரும் மிகக் குறைவு. யாவரும் இங்ஙனமிருக்க,ஜனங்கள் பசுக்களைப்போல் இவ்விதம் கவலை யற்றிருப்பதன் காரணம் யாது ?

[ஒரு பக்கம் பார்க்கிறான்.

இவர்கள் வேதத்தை அத்தியயனம் செய்வதில் மாத்திரம் கவலை யுள்ளவர்களாக விருக்கிறார்கள். அதன் பொருளை

யறிந்தவர்களல்லர். ஆதலால் இவர்கள் வேதத்தைக்கெடுப்பவர்களே!

[வேறொருபக்கம்பார்க்கிறான்.

இவர்கள் பிக்ஷைக்காகத் துறவறம் பூண்டு தலையை மொட்டையடித்துக் கொண்டிருக்கிறார்கள். தங்களுக்குள் தங்களை மகா வித்துவானாக நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவர்கள் வேதாந்த சாஸ்திரங்களைக் கெடுக்கிறவர்களே.

[சிரிக்கிறான்.

பிரத்தியட்சப் பிரமாணங்களால் அறியப்படும் பொருள்களுக்கு விரோதமாக ஏதோ ஒரு வஸ்துவைச் சொல்லுகிற வேதாந்தங்களும் சாஸ்திரங்களாயின், பௌத்தர்கள் மேலுள்ள குற்றந்தான்யாது? ஆகையால் இவர்கள் பேச்சைக் கேட்பதும் நமக்கு அதிகமான பாவத்தை விளைக்கும்.

[மறுபடி வேறொரிடத்திற்குப் போய் நிற்கிறான்.

சைவபாசுபதர்கள் முதலான இந்தப் பாஷண்டர்கள் (1)கௌதமருடைய மதத்தை மிகவும் வருத்தத்துடன் கற்றவர்கள். ஆதலால் இவர்கள் பசுக்களே! இவர்களுடன் பேசுவதிலுங்கூடமனிதர்கள்நரகத்தையடைவார்கள். ஆதலால் இவர்களை நமது கண்ணுக் கெதிரே நிறுத்தாமல் அப்புறப் படுத்த வேண்டும்.

[மற்றோரிடம்போகிறான்.

கங்கைக்கரையில் அந்நதியின் அலைகளால் குளிர்ச்சியடைந்த கற்களில் போட்டுள்ள அழகான தருப்பாஸனங்களில் உட்கார்ந்து, கரங்களில் தருப்பைகளைப் பிடித்துக் கொண்டு சிலாக்கியமான தண்டு கமண்டலங்களோடு விளங்குகிறவர்களும் வரிசையாய்க் கோக்கப்பட்ட ஜப மாலையிலுள்ளமணிகளைப் பிடித்துத் தள்ளுவதில் சுறுசுறுப்புள்ள நுனிவிரல்களுள்ளவர்களாயு மிருக்கிற இந்த டம்பக்காரர்கள் பணக்காரர்களுடைய பொருளை அபகரிக்கிறார்கள்.

---

1 கௌதமர் வேதத்தைப் பிரமாணமாக ஒப்புக்கொள்கிறார். இவர்களுக்கு வேதம் பிரமாணமல்ல; ஆகையால் அவருடைய மதத்தைவருத்தப்பட்டுக் கற்கிறார்கள்.

(1) திரி தண்டம் என்கிற வேடத்தினால் பிழைக்கி வர்கள். துவைதம் அத்வைதம் என்கிற இரண்டு மார்க்கங்களையும் விட்டகன்றவர்கள்.

[மற்றொரிடத்திற்குப் போய்ப் பார்த்து நிற்கிறான்

ஆச்சரியம்! இந்தக் கங்கைக் கரையில் ஓர் ஆச்சிரமம் விளங்குகிறது. இதன் வாசற்படிக் கருகில் மிக உன்னதமான மூங்கிற் கழிகள் புதைக்கப்பட்டிருக்கின்றன. அக்கழி களின்மேல் ஆயிரக்கணக்கான சுத்த வஸ்திரங்கள் கூத்தாடிக் கொண்டிருக்கும்படி போடப்பட்டிருக்கின்றன. அங்கங்கே மான் தோல், (2) திருஷத், உபலம், ஸமித், சஷாலம் உலூகலம், முஸலம் இவைகள் வைக்கப்பட்டிருக்கின்றன. இடையறாமல் ஹோமம் செய்யப்படும் நெய்யின் நறுமணத் தோடு கிளம்பும் புகையானது வானத்தைக் கருமையாகச் செய்திருக்கிறது. இது இல்லறம் நடத்திவரும் ஒருவனு டைய வீடாகவிருக்க வேண்டுமென்பது நிச்சயம். இருக் கட்டும்; இரண்டு மூன்று நாள் இங்கிருந்து வசிக்கத்தக்கதும் பரிசுத்தமுமான ஸ்தலந்தானிது.

(ஆச்சிரமத்தி னுட்புகுந்து பார்க்கிறான்.

ஆச்சரியம்! இதோ யாரோ ஒரு புருஷன் நெற்றி, புயம், வயிறு, மார்பு, கழுத்து, உதடு, முதுகு, மோவாய்க் கட்டை, கன்னங்கள், முழங்கால்கள் இவைகளில் மண் (கோபி சந்தனம் அல்லது திருமண்)ணால் பொட்டிட்டுக்கொ

1 மூன்று தண்டங்களையும் ஒன்றாகக் கட்டிப் பிடித்திருக்கும் துற விகள். இவர்கள் பட்ட பாஸ்கரருடைய மதத்தை யனுசரித்து பேதம் அபேதம் என்கிற இரண்டையும் பேசுகிறவர்களாகையால், துவைதம் அத்வைதம் என்கிற இரண்டு மார்க்கங்களினின்றும் விலகினவர்கள்

2 திருஷத் முதல் முசலம் வரையிலுள்ளவைகள் யாகத்திற்குவேண் டிய பாத்திரங்கள்.

ண்டு தலைமயிர் நுனியிலும் செவிகளிலும் இடையிலும் கரங்களிலும் தருப்பங்களைத் தரித்துக் கொண்டு டம்பமே ஓர் உருக்கொண்டது போல் விளங்குகிறான். இருக்கட்டும்; இவனருகிற் செல்கிறேன்.

[அருகிற்போகிறான்.

மங்களம் உண்டாகுக!

[டம்பன் ஹுங்காரஞ் செய்து
தடைப்படுத்துகிறான்.

சிறுவன் ஒருவன் பிரவேசிக்கிறான்.

சிறுவன்:—(பரபரப்புடன்) ஓய்! அந்தணரே! தூரத்திலேயேயிரும். ஏனெனில் கால்களை அலம்பிக்கொண்டுதான் இவ்வாச்சிரமத்திற்குள் பிரவேசிக்கவேண்டும்.

அகங்காரன்:—(சினமடைந்து) அடேபாபி! துருக்கனுடைய வீட்டிற்கு நான் வந்து விட்டேன். இல்லந் தேடி வந்த வேத சாஸ்திர சம்பன்னர்களான பிராமணோத்தமர்களை ஆசனம் கால் அலம்ப ஜலம் இவைகளைக்கூடக் கொடுத்துபசரிக்காத கிருகஸ்தனுடைய வீடல்லவா இது?

[டம்பன் கைஜாடைசெய்து
சமாதானம் செய்கிறான்.

சிறுவன்:—தூரதேசத்திலிருந்து வந்த உமது குலம், சீலம் முதலியவைகளைச் செவ்வனே அறிந்து கொள்ளக்கூடவில்லையேயென்று பூஜார்கமான எமது குரு ஆக்ஞாபிக்கின்றனர்.

அகங்காரன்:—அடே! எமது குலம் சீலம் முதலியவைகளைக்கூடப் பரீக்ஷிக்க வேண்டுமா ? கேட்கலாம்-

உலகத்தில் மிகச் சிறந்தது கௌடதேசம். அதில் ராடா நகரம் ஒப்பற்று விளங்குவது. அந்நகரத்தில் மேலானதாக விளங்குவது பூரிசிரேஷ்டம் என்கிற ஓர் வீடு. அதில் உத்தமர் என்ற பெயருள்ள எமது தந்தை வசித்து வருகிறார்.

மஹாவம்சத்திற் பிறந்த அவருடைய புத்திரர்களை இந்தப் பூவுலகில் யாரேயறியாதார்? அவர்களுள் அறிவு, நன்னடத்தை, பகுத்தறிவு, தைரியம், வினயம், ஒழுக்கம் இவைகளில் உத்தமனாக விளங்குபவன் யானே,

[டம்பன் சிறுவனைப்பார்க்கிறான்.

சிறுவன்:—(செப்புக்குடத்தைஎடுத்துக்கொடுத்து) சுவாமி! கால்களைச் சுத்திசெய்துகொள்ளலாம்.

அகங்காரன்:—(தனக்குள்) இதிலென்ன விரோதமிருக்கிறது அப்படியே செய்வோம்.

[காலலம்பிக்கொண்டு அருகே செல்கிறான்.

டம்பன்:— [பற்களை நெரித்துக்கொண்டு பையனைப் பார்க்கிறான்.

சிறுவன்:—தூரத்திலிருக்க வேண்டும். காற்றினலடிக்கப் பட்ட வேர்வைத்துளிகள் தெறிக்கின்றன.

அகங்காரன்:—இப்படிப்பட்ட பிராமணத்தன்மையானது இதற்கு முன் ஒருவருக்கு மிருந்ததேயில்லை!

சிறுவன்:—அந்தணரே! அதுசரிதான்.

அதாவது:—

அநேக அரசர்கள் வணங்குவதற்கு அருகில் வருவார்கள். வந்தாலும் இவரது திருவடியைத் தொடுவதில்லை. இவர் தமது பாதங்களை வைக்கக்கூடிய பீடத்தின் அருகே நின்று வணங்குவார்கள். அது நீராஜனம் செய்வதுபோலிருக்கும்.

அகங்காரன்:—(தனக்குள்) ஆ! இந்த தேசத்தை டம்பன் வசப்படுத்திக்கொண்டிருப்பதாகத் தோன்றுகிறது. (வெளிப்படையாய்) சரி இந்த ஆசனத்தில் உட்காருகிறேன்.

[உட்காரப்போகிறான்.

சிறுவன்:—கூடாது; பெரியவர்க்குரிய இந்த ஆசனத்தில் வேறெவரும் உட்காருவதில்லை.

அக:—அடேபாபி! தென்ராடா நகரத்தில் பரிசுத்தமுள்ளவனெனப் பிரசித்தி யடைந்த நாம் கூட இந்த ஆசனத்தில் உட்காரக் கூடாதா? அடேமுட்டாளே! கேள்.

நமதன்னை அவ்வளவு நல்லவம்சத்திற் பிறந்தவளல்ல. அதற்காக யான் சுரோத்திரிய னுடைய பெண் ஒருத்தியை மணந்தேன். அதனால் நான் தகப்பனைக் காட்டிலும் மேலானவன். எனது மனைவியிடத்தில் எனக்கு மிகுந்த அன்புண்டு. என் மைத்துனனுக்குச் சகோதரியின் பிள்ளை(மருமகன்)யினுடைய ஒருபெண்ணின்மேல் பொய்யான அபவாத மேற்பட்டிருக்கிறது. அந்த சம்பந்தத்தினால் என் மனைவியையும் தள்ளிவிட்டேன்.

டன்:—ஓய் பிராமணரே! அங்ஙன மிருக்கக் கூடும். இருந்தாலும் நம்முடைய விஷயம் உமக்குத் தெரியாது.

அதாவது-

முன்பு ஒருசமயம் நான் பிரமனிடத்திற்குச் சென்றேன். என்னைக் கண்டதும் அங்கிருந்த முனிவர்கள் யாவரும் எழுந்திருந்தார்கள். பிரம்மாவானவர், எனக்கு நல்வார்த்தைசொல்லி பசுவின்சாணி கொண்டு தமது துடையைச் சுத்தஞ் செய்து கொண்டு என்னை உட்காரவைத்துக் கொண்டார்.

அக:—(தனக்குள்) அந்தோ! டம்பக்காரனாகிய இந்த விப்பிரனுடைய பேச்சு ஆச்சரியகர மாகவே யிருக்கிறது.

[சற்றுயோசிக்கிறான்

ஒருக்கால் இவன் டம்பக்காரனாகவே இருப்பானோ? இருக்கட்டும். (வெளிப்படையாய்) ஆ! ஆ!! இவன் ஏனோ இங்ஙனம் இறுமாந்து பேசுகிறான்; (சினங்கொண்டு) இந்திரனென்பவன் யாவன்? பிரமனென்பவன் யாவன்? சொல்; (வசிஷ்டர்முதலான) மகரிஷிகளின் உற்பத்திஸ்தானமெது? நூறு இந்திரன், நூறு பிரமன், நூறு முனிவர்கள் இப்போது (உன் எதிரில்) விழவேண்டுமா? என் தவத்திற்கு அவ்வளவு பல மிருக்கிறதென்றறி.

டன்:—(ஆனந்தத்துடன்பார்த்து) (தனக்குள்)பெரியவராகிய நமது பாட்டனார் அகங்காரனாயிற்றே (வெளிப்படையாய்) சுவாமி! லோபனுடைய புத்திரன் டம்பன் வந்தனம் செய்கின்றேன்.
[வந்தனம்செய்கிறான்.

அக:—குழந்தாய்! நீ பரிபூர்ணமான ஆயுளை யுடையவனாக விருப்பாய். துவாபரயுகக் கடைசியில் நீ குழந்தையாயிருந்தபோது நான் உன்னைப் பார்த்திருக்கிறேன். இப்போது வெகுகாலமாய்விட்ட படியாலும் கிழத்தனம் வந்துவிட்ட மையாலும் நான் உன்னை நன்றாய்க் கண்டுபிடிக்க முடியவில்லை. உன் குழந்தை பொய் சுகமாயிருக்கிறானா?

டன்:—ஆம்! அவனும் மகாமோகருடைய ஆக்கினைப்படி இங்குதானிருக்கின்றான். அவனன்றியான் ஓர் நிமிஷமும் இருக்க முடியாது.

அக:—உனது தாய் தந்தையர்களான (1) திருஷ்ணை, லோபம் இவர்கள் சுகமாயிருக்கின்றார்களா?

ட-ன்:—மகாமோகராஜனுடைய கட்டளைப்படி அவர்களும் இங்குதானிருக் கின்றார்கள். அவர்களை விட்டு ஓர் கணமும் நானிருக்கமாட்டேன், பூஜார்கரான தாங்கள் இங்கெழுந் தருளியதன் காரணம்யாதோ?

அக:—குழந்தாய்! மகாமோகனுக்கு விவேகனால் பயமுண்டாயிருப்பதாகக் கேள்வி. அதனைத் தெரிந்துகொள்வதன் பொருட்டு இங்குவந்தேன்.

ட-ன்:—தாங்கள் வந்தது நல்லதுதான். ஏனெனில் இந்திரலோகத்திலிருந்து மகாராஜனும். இவிடம் வந்திருப்பதாகக் கேள்வி. மகாராஜன் தானிருந்து வாசஞ்செய்யக் காசிமாநகரை ராஜதானியாக்கிக் கொள்ளக் கருதி யிருப்பதாய் ஜனங்களுக் குள் ஓர் வதந்தி உலவுகின்றது.

---

1 திருஷ்ணை- போதுமான பொருளிருந்தும் திருப்தி யடையாது மென்மேலும் வேண்டல்.

2 லோபம்- தன்சொத்தைக் காபாற்றிக் கொண்டு பிறர் சொத்தையபகரிக்க நினைத்தல்.

அக:—அப்படியேனும் மகாமோகன் இங்கிருக்கக் காரணமென்ன?

டம்:-சுவாமி! விவேகனுடைய உபத்திரவந்தான். பிரமோபதேசத்தை யடையக் கூடியதான இந்நகரம் அழிவற்றது. இது வித்தை பிரபோதம் இவைகளுடைய உற்பத்திக்குத்தக்க இருப்பிடமுமாகும். விவேகனுடைய குலத்தை யொழிப்பதற்காக இங்கு வசிக்க நினைக்கிறார்.

அக:—(பயத்துடன்) அப்படியாயின் இதற்குப் பரிகாரம் செய்ய முடியாது. ஏனெனில், இந்நகரத்து மனிதர்கள் ஒன்றும் அறியாதவர்களாயினும் அவர்களுடைய மரணகாலத்தில் பரமசிவன் கருணை கூர்ந்து, ஸம்ஸார பயத்திலிருந்து விடுவிக்கும் தாரகபிரம மென்னும் பிர்ம்மக் ஞானத்தை விளக்குகிறார்.

டம்:—இது உண்மைதான். ஆனாலும் காமம் குரோதம் இவர்களுக்குட்பட்டவர்களுக்கு இது கிடைக்காது. "கால்கள், கைகள் மனம் ஞானம், யோனி இவைகளும் சாந்திராயணம் முதலிய தவங்களும் எவனுக்குச் சரியான நிலையில் நின்று தர்மசாஸ்திரத்திற்குக் கட்டுப்பட்டிருக்கின்றனவோ அவனுக்குத்தான் தீர்த்த பலன் கிடைக்கும்" என்று வேதசாஸ்திரங்களை யறிந்தவர்கள் கூறுகிறார்கள்.

(திரைக்குள்)

ஓ நகரஜனங்களே! மகாமோகராஜன் இதோ வந்துவிட்டார். ஆகையால் ஸ்படிக மயமான மேடைகளைச் சந்தனக் குழம்புகளால் அழகுபெறச் செய்யவேண்டும். தண்ணீர்க் குழாய்களைத் திறந்துவிட வேண்டும். இரத்தினத் தோரணங்களை நான்குபக்கங்களிலும் உயர்த்திவிடவேண்டும். ஒவ்வொரு மாடங்களிலும் இந்திர தனுவைப் போன்ற பலவர்ணமுள்ள கொடிகளை நாட்டவேண்டும்.

டம்:—சுவாமி! மகாராஜன் சமீபத்தில் இருக்கிறார். ஆகையால் தாங்கள் நேரில் போய் மரியாதை செய்யவேண்டும்.

அக:—அப்படியே யாகட்டும்.

[இருவரும் போய்விட்டார்கள்.

(1.) பிரவேசம்.

கௌரவத்திற்குத் தக்கபடி மகாமோகராஜன் பரிவாரங்களுடன் பிரவேசிக்கிறான்.

மகா:—ஆச்சரியம்! (சிரிக்கிறான்) மூடபுத்தியுள்ளவர்களுக்கு எல்லையேகிடையாது. இச்சரீரமன்றிவேறொருருவமுள்ள ஆத்மாவொன்றிருப்பதாயும் அது பரலோகத்தில் (தன் கர்மங்களின்) பலன்களை யனுபவிக்கிறதாயும் நினைத்துக் கொண்டிருப்பவர்களின் எண்ணமானது ஆகாயத்தின்கண் முளைத்த மரத்தின் பூவிலிருந்து நல்லகனியைப் பெறலாமென்று எண்ணங்கொள்வது போலாம்.

தங்களால் கற்பிக்கப்படும் பொருளையே யெண்ணிப் படிப்புள்ள துஷ்டர்கள் இவ்வுலகத்தை வஞ்சிக்கிறார்கள்

அதாவது—

முக்காலத்திலும் இல்லாத ஒருவஸ்துவை உண்டென்று சொல்லிக்கொண்டு ஆடம்பரத்துடன் அதிகப்பேச்சுப் பேசுகிறவர்களாகிய (1) ஆஸ்திகர்கள் உள்ளதைஉள்ளபடி சொல்லுகிற (2) நாஸ்திகர்களை நிந்தனைக்குள்ளாக்குகிறார்கள். ஆச்சரியம்! அநேக பூதங்கள் ஒன்று சேர்ந்ததால் சைதன்னியத்தை யடைந்த இச்சரீரத்தைத் தண்டிக்கின், அதுவன்றித் தனியே ஜீவனென்றிருப்பதுண்மையாயின், அந்த ஜீவனை யாரேனும் பார்த்ததுண்டா? நன்றாய் யோசித்துப் பாருங்கள். தவிர இவர்கள் உலகத்தை மட்டும் வஞ்சிக்கிறார்கள் என்பதில்லை. தனது ஆத்மாவையு மல்லவா வஞ்சிக்கின்றனர்.

அதாவது:—

சகல ஜனங்களுக்கும் முகம் முதலான அவயவங்கள் சமானமாகவிருக்க, சாதி யென்பது ஏது? ஆதலால், இவள்

---

1. பிரவேசம்—விஷ்கம்பம் போன்ற இலட்சணமுடையது. ஆனால் சேவகன் முதலிய நீசபாத்திரங்களைக் கொண்டு நடத்தப்படவேண்டியது

1 ஆஸ்திகர்—சரீரத்தைத் தவிர ஆத்மாஉண்டென்றும் பரலோகம் தெய்வம் இவைகளுண்டென்றும் சொல்லுகிறவர்கள்,

2 நாஸ்திகர்கள்—அவைகளொன்றும் இல்லையென்று சொல்பவர்கள்.

பிறருடைய மனைவி, இது பிறருடைய பொருள், என்பன வாதி பேதங்கள் நமக்குத் தோன்றவில்லை. ஒருபிராணியைத் துன்புறுத்துவதிலாவது ஒரு மாதினிடம் காதல் கொள்வதிலாவது அல்லது அவளிடம் சேர்வதிலாவது பிறருடைய பொருளை யபகரிப்பதிலாவது இது செய்யத்தகுவன இது தகாதன வென்கிற ஆலோசனையைக் கையாலாகாதவர்களே செய்கிறார்கள்.

ஆலோசித்துச் சிலாகித்துக் கொள்கிறான்

எவ்விதத்திலும் சார்வாக சாஸ்திரமே சாஸ்திரம். இதில் பிரத்தியட்சமொன்றேபிரமாணம், பிருதிவி, அப்பு, தேயு, வாயு இவைகள் தான் பதார்த்தங்கள். பொருள் (திரவிய மீட்டல்) காமம் (இந்திரிய இச்சையை நிறைவேற்றுதல்) இவை இரண்டுமே புருஷார்த்தங்கள். பூதங்களே (சேர்ந்தால்) சைதன்னியத்தை யடைகின்றன. பரலோகம் இல்லை. மரணமே வீடு என்கிறது. நமது கொள்கையை அனுசரித்தே பிரகஸ்பதிபகவான் தாம் செய்து சார்வாகருக்குக் கொடுத்தார். அவரும் தமது சீடர்கள் மூலமாக அச் சாத்திரத்தை இவ்வுலகில் பிரசித்தப்படுத்தி விட்டார்.

சார்வாகன் சீடனுடன் வருகிறான்.

ார்:—குழந்தாய்! (தண்டநீதி) ராஜநீதி ஒன்றே சாஸ்திரமென்பது உனக்குத் தெரியுமா? வார்த்தா (இது நன்மையைக் கொடுக்கும் இது தீமையைக் கொடுக்கும் என்று விவரித்துக் காட்டுவது) சாஸ்திரம். இதிலேயே அடங்கியிருக்கிறது. மூன்று வேதங்கள் என்பது வஞ்சகருடைய பிதற்றல். யாகத்தைச் செய்பவன், யாகமென்கிற கிரியை முதலிய இவைகளெல்லாம் அழிந்த பிறகு யாகம் செய்தவர்களுக்கு சொர்க்கமுண்டாவது உண்மையானால், காட்டுத்தீயால் எரிக்கப்பட்ட மரங்களில் கனிகள் உண்டாகக் கூடும். தவிர, யாகத்தில் கொல்லப்பட்ட பசுவுக்குச் சொர்க்கம் கிடைப்பதாய் ஒப்புக்கொண்டதால், யாகம் செய்பவன் தன் தந்தையை யாகத்தில்

இடங்களிலுள்ளவர்கள் அனேகமாய்த் தங்கள் பிழைப்புக்காக மூன்று வேதங்களையும் அனுசரித்து வருகிறார்களேயல்லது வேறல்ல. ஆசாரியரும் அங்ஙனமே கூறியிருக்கின்றனர்.

அதாவது:—

அக்னிஹோத்திரம், மூன்று வேதங்கள், மூன்று தண்டங்களைத் தரித்துக்கொள்ளும் சன்னியாசம், விபூதியணிதல். இவைகள் யாவும் புத்தியும் பலமுமில்லாதவர்கள் பிழைப்புக்கு வழியாகக் கொண்டதெனப் பிரகஸ்பதி பகவான் கூறியிருக்கிறார்.

மகாராஜாவே! ஆகையால் குருக்ஷேத்திரம் முதலிய விடங்களில், வித்தை, பிரபோதம் இவைகளுண்டாகுமென்பதை ஒருநாளும் நினைக்கவேண்டாம்.

மகா:—சரி, செய்தது மிகவும் நன்றே. ஒருபெரிய தீர்த்தமல்லவா வீணாக்கப்பட்டது.

சார்:—சுவாமி! இன்னுமொரு விண்ணப்பமிருக்கிறது.

மகா:—அது யாவது?

சார்:—விஷ்ணுபக்தி யென்னும் பெயர்கொண்ட ஒருயோகினி இருக்கின்றாள். அவள் மகாமகிமையுள்ளவள். அவளுடைய ஸஞ்சாரத்தைக் கலியானவன் குறைத்திருக்கிறான். ஆயினும் அவளுடைய அனுக்கிரகம் பெற்றவர்களை எங்களுக்குப் பார்க்க முடியவில்லை. ஆகையால் இவ்விஷயமாகத் தாங்கள் கவனம் செலுத்தவேண்டுவ தவசியம்.

மகா:—(அச்சத்துடன் மனதிற்குள்) ஆ! கஷ்டம்! அந்தயோகினியின் மகிமையானது மிகவும் அதிகம். அவள் இயற்கையிலேயே நம்மிடத்தில் பகைகொண்டவள். அவளை யழிப்பதும் முடியாத காரியம். இருக்கட்டும் (வெளிப்படையாய்) அப்பா! சார்வாகா! அவளுக்காக அஞ்ச வேண்டாம். காமம் குரோத முதலிய பகைவர்க ளிருக்கையில் அவள் எங்கே தலைகாட்டுவது?

சார்:—ஆயினும், வெற்றி பெற வேண்டுமென்கிற எண்ணமுடைய அரசனொருவன் பகைவன் அற்பனாயினும் அலட்சியமாயிருத்தல் கூடாது. ஏனெனில், பகையாளி அற்பனாயினும் நாளடை

வில் அதிகரித்து மிருந்த கஷ்டத்தைக் கொடுப்பான். அதெங்ஙனமெனில் முள்ளின் நுனியானது மிகச் சிறியதேயாயினும் காலைத் தொந்தரை செய்கிற தல்லவா?

ர;—[திரையை நோக்கி]பாரடா! அங்கே!

[காவற்காரன் ஓடி வருகிறான்

வ;—மகா ராஜானுக்கு ஜய முண்டாகுக. அடியேனுக்கிடும் கட்டளை யாது?

ர:—அடேய்! அஸத்சங்க (துஷ்டசகவாசம்) விஷ்ணுபக்தி யென்னும் யோகினியை நீங்களே! கவனமாய்க் கொல்ல வேண்டு மெனக் காமம், குரோதம்: லோபம், மதம், மாற்சரியம் முதலானவர்களுக்கு எனது கட்டளையைத் தெரிவி.

:—(வணக்கத்துடன்)மகாராஜா உத்தரவுப்படியே செய்கிறேன்.

கையில்கடிதத்தை யெடுத்துக் கொண்டு
ஒரு புருஷன் வருகிறான்.

ுஷன்:—நான் உத்கல தேசத்திலிருந்து வந்திருக்கிறேன். அவ்விடத்திற் கடற்கரையில் "புருஷோத்தமம்" என்று ஒரு கோவிலிருக்கிறது. அதிலிருக்கிற எஜமானர்களாகிய மதம், மானம் என்பவர்கள் என்னைத் தங்களிடத்திற்கு அனுப்பினார்கள். (பார்க்கிறான்) இது காசிக்ஷேத்திரம், இது ராஜகிரகம் உள்ளே போகிறேன்.

[உள்ளே போகிறான்.

இதோ அரசன் சார்வாகனுடன் கூட ஏதோ இரகசியம் பேசிக் கொண்டிருக்கிறார். அருகே செல்கிறேன்.

அருகே செல்கிறான்.

மகா ராஜாவுக்கு ஜயமுண்டாகுக! ஜயமுண்டாகுக!! இதோ ஒரு கடிதமிருக்கின்றது. மகா ராஜா இதைப் பார்க்க வேண்டும்.

கடிதத்தைக் கொடுக்கிறான்

ர:—(கடிதத்தை வாங்கிக் கொண்டு) நீ எங்கிருந்துவருகிறாய்?

ுஷன்:—மகாராஜாவே! நான் புருஷோத்தமததிலிருந்து வருகிறேன்.

மகா:—( தனக்குள் ) காரியம் விபரீதமாக விருக்கலாம். (வெளிப் படையாய்) சார்வாக ! போ! ஆகவேண்டிய காரியங்களில் நீ ஜாக்கிரதை யாயிரு.

சார்:—மகாராஜா உத்தரவுப் படியே.

[போகிறான்.

மகா:—(கடிதத்தைப் படிக்கிறான்)

க்ஷேமம்—காசியம்பதி யிலிருக்கும் மகா ராஜாதி ராஜ பரமேசுவரனான மகாமோகருடைய பாதங்களில், புருஷோத்தமம் என்னும் கோயிலிலிருக்கும் மதம், மானம் (கர்வம்) இவர்கள் அஷ்டாங்க பூர்வமாக நமஸ்கரித்து எழுதிய விக்ஞாபனம்—

அதாவது:—க்ஷேமத்திற்கு யாதொரு குறைவுமில்லை. மற்றொன்று—சாந்தி தேவியானவள் தாயான சிரத்தையுடன் விவேகனுக்குத் தூதுபோக வமர்ந்து உபநிஷத் தேவியை விவேகனுடன் சேர்ப்பதற்காக இரவும் பகலும் புத்திசொல்லி வருகிறாள். தவிர தர்மம் காமனுடன் சேர்ந்தவனாயினும் வைராக்கியம் முதலானவர்களால் கலக்கப் பட்டவன் போற் காணப்படுகிறான். அதனால் தான் காமனை விட்டுப் பிரிந்து எங்கேயோ மறைந்து திரிகிறான். இவைகளைத் தங்களுக்கு அறிவித் திருக்கிறேன். யுக்தம் போற் செய்யவும்.

மகா:—ஆ! இதென்ன ! பெரும் மூடர்களாக விருக்கிறார்கள். சாந்திக்கு மல்லவா பயப்படுகிறார்கள் ! காமன் முதலியவிரோதிக ளிருக்கையில் இவள் எங்ஙனே பிரவேசிப்பாள்?

அதாவது.—

பிரமன் உலகத்தைச்சிருஷ்டிப்பதில் மாத்திரம் கவலையுள்ளவனாக விருக்கிறான். சிவன் பார்வதி தன் கைகளால் ஆலிங்கனம் செய்து கொள்வதி னுண்டாகும் ஆனந்தந் ததும்புங் கண்களுள்ளவனா யிருக்கிறான். தவிர தக்ஷனுடைய யாகத்தை யழித்திருக்கிறான். விஷ்ணு வானவன் லக்ஷ்மியினுடையகன்னங்களில் மகரம் போலுள்ள (குங்கும) ரேகைகளைத் தன் மார்பில் அடையாளமாகக் கொண்டு கடலில் நித்திரை செய்கிறான். இவர்களே இங்ஙன மிருக்க மற்றவர்களிடத்தில்

பொறுமை யென்பது எங்ஙன முண்டாகும்? (புருஷனைப் பார்த்து) அடே! முன் பின் சிறிதும் யோசியாதவனே! போ. விரைவாகக் காமனிடம் சென்று நமது கட்டளையைத்தெரிவி. தர்மன்மிகவும் கெட்ட எண்ணமுள்ளவனென்று நாம்அறிந்து கொண்டோம். இனி அவனிடம் கணமும் நம்பிக்கைவைக்கலாகாது.

ருஷன்:—மகா ராஜா உத்தரவுப் படியே செய்கிறேன்.

[போகிறான்

கா:—(தனக்குள் ஆலோசிக்கிறான்) சாந்திக்கு என்ன உபாய மிருக்கின்றது? வேறு உபாயம் வேண்டாம். க்ரோதம் லோபம் இவர்களே போதுமானவர்கள். (வெளிப்படையாய்) யாரடா அங்கே!

ாயிற்காப்போன்—(வேகமாக வந்து) மகா ராஜா கட்டளை யிட வேண்டும்.

கா;—க்ரோதனையும் லோபனையும் கூப்பிடு.

ா:—மகாராஜா உத்தரவுப்படியே.

[போகிறான்

க்ரோதனும் லோபனும்
வருகிறார்கள்.

ரோதன்;—சாந்தி, சிரத்தை, விஷ்ணு பக்தி இவர்கள் நமதரசனுடன் விரோதிக்கிறார்களெனக் கேள்விப் பட்டேன். அடே! நானிருக் கையில் இவர்கள் தங்கள் ஜீவன்களை நினைத்துப் பாராமல் காரியங்களை நடத்துகிறார்கள்.

அதாவது—

உலகம் பார்வையை யிழக்கச் செய்து விடுவேன். சைதன்னியத்தையுடைய தைரிய புருஷனைத்தைதன்னியமில்லாமற் செய்து விடுவேன். என்வேலைத்தனதம் இன்ன தென்று தெரியாது. இதத்தைக் கூறினும் கேட்கப் பட்டவனல்ல. அறிவுடையோனையும் அவன் கற்றதை மறக்கும்படி செய்வேன்.

ாபன்:—அடே! எனக்குள் எகப்பட்டவர்கள் ஆசை யாகிய நதிகளின் வரிசையையும் கடந்து சொல்ல மாட்டார்கள். சாந்தி முதலானவர்களை அவர்கள் எப்படி நினைக்கப் பொற

ரூர்கள்? நண்பா! கவனி! கவனி!! மதவொழுக்கால் மாசடைந்த கன்னங்களையுடைய யானைகள் எனக்கிருக்கின்றன. காற்றிலும் வேகமாகச் செல்லும் குதிரைகளிருக்கின்றன. இன்னும் எதையும் யானடைவேன். இது கிடைத்தது இது கிடைப்பது இது கிடைக்கப் போவது என்பனவற்றையே சிந்தித்துக் கொண்டு அதனால் சஞ்சலமுற்ற மனதை யுடைய ஜனங்களுக்குச் சாந்தியின் பேச்சுத் தானேது?

கு-ன்:—நண்ப! எனது மகிமையை நீ யறிவாய்:— தேவேந்திரன் துவஷ்டாவின் புத்திரனை விருத்திராசுரனைக் கொன்றான். அர்த்த சந்திர தாரியான பரமசிவன் பிரமனது தலையைச் சேதித்தான். விசுவாமித்திரன் வசிஷ்டருடைய புத்திரர்களைக் கொன்றான். நானே ஞானம், கல்வி, கீர்த்தி, ஆசாரம் உத்தமமான பராக்ரமம் இவைகளை அலங்காரமாகக் கொண்ட அனேக குலங்களை ஒரு நொடியில் அடியோடு நாசம் செய்ய வல்லவன்.

லோ-ன்:—திருஷ்ணே! இப்படி வா!

திருஷ்ணை:—(வருகிறாள்) ஆரியபுத்திர! தமதாக்ஞையாது?

லோ-ன்:—என் அன்பிற் குரிய நாயகியே கேள்; ஏ திருஷ்ணே! நீ சிறிது உன் அவயவங்களை உயர்த்துவா யானால், வயல்கள், கிராமங்கள், வனங்கள், மலைகள், பிரதான நகரங்கள், தீவுகள், பூமண்டலம் இவைகளிற் கொண்ட பற்றுதலாகிய உறுதியான கயிற்றால் கட்டுண்டவர்களும் கிடைத்ததற்கு மேல் இன்னும் கிடைக்கவேண்டியதற்காக யோசிக்கிறவர்களுமான ஜனங்கள் இலக்ஷக் கணக்கான பிரம்மாண்டங்களை யடையினும் சாந்தியைப் பெறுவதேது?.

தி-ணை:—ஆரியபுத்திர! இந்த விஷயத்தில் எனக்கே எப்போதுங் கவலை யுண்டு. இப்பொழுது தங்களுத்தரவையும் பெற்றேன். இனி பிரமாண்டங்கள் கோடி கோடியாய்க் கிடைப்பினும் என் வயிறு நிரம்பாது.

கு-ன்:—ஹிம்ஸே! இப்படிவா!

ஹிம்ஸை:—(வருகிறாள்) இதோ யிருக்கிறேன். ஆரியபுத்திர! உத்தரவிடவேண்டும்.

-ம்:—என்பிரிய நாயகியே! கூடச் சேர்ந்து தருமங்களை யனுஷ்டிக்கிற நீ என்னுடனிருந்தால் தாய் தந்தையரைக் கொல்வது கூடப் பெரிதல்ல.

இரண்டு கைகளையுநெறித்துச் சொல்கிறார்)

அதாவது:—

இங்கு தாய் என்கிற பிசாசு யார்? தந்தையார்? உடன் பிறந்தவர்கள் என்கிற புழுக்கள் எவர்கள்? இந்த உறவினர்களுடைய கூட்ட முழுவதையும் தொலைக்க வேண்டும். விடர்களைப் போல் இந்த ஞாதிகளும் கெட்ட நடத்தையுள்ளவர்கள்.

வயிற்றிலுள்ள சிசுமுதல் இவர்களுடைய குலமுழுவதையும் நான் ஒழிக்காத வரையில் எனதவயவங்களில் ஜ்வலித்துக் கொண்டிருக்கும் கோபாக்கினியின் பொறிகள் தணியா. (பார்த்து) இதோ மகாராஜனிருக்கிறார். சமீபத்திற் போவோம்.

எல்லாரும் நெருங்கிவந்து "அரசனுக்கு ஜயமுண்டாகுக" என்கிறார்கள்.

மகா-ன்:—சிரத்தையின் பெண் சாந்தியென்பவள் நமக்குப் பகைவள். அவளை நீங்கள் தொலைக்க வேண்டியதவசியம்.

எல்லாரும்—மகாராஜனது உத்தரவுப் படியே.

எல்லாரும் போகிறார்கள்

மகா-ன்—சிரத்தையின் பெண் என்பதனால் வேறோருபாயம்மனதில் தோன்றுகிறது. அதாவது சாந்தியின் தாயார் சிரத்தை. அவளோ பராதீனை. ஆதலால் ஏதேனும் ஓர் உபாயத்தால் அவளை உபநிஷத்தினிடமிருந்து பிரிக்கவேண்டும். மெலிந்தவளான சாந்தி தன்தாயாரின் பிரிவாற்றாமையின் துக்கம் பொறுக்க மாட்டாமல் அழிந்து போய்விடுவாள். சிரத்தையைப் பிரிக்க, மித்தியாதிருஷ்டி (ஒன்றிலும் நம்பிக்கையில்லாத எண்ணம்) என்னும் மாது தான் சாமர்த்தியமுள்ளவள். ஆகையால் இதற்கு அவளையே அனுப்ப வேண்டும். (பக்கம் பார்த்து) விப்ரமாவதி! மித்தியாதிருஷ்டியென்னும் ஸ்திரீயைச் சீக்கிரமாக அழைத்துவா.

விப்ரமாவதி — மகாராஜாவின் உத்தரவுப்படியே யழைத்து வருகிறேன்.

போய் மித்தியாதிருட்டியுடன் வருகிருள்.

மித்தியா:— தோழி! அநேக நாளாய்ப் பார்க்காத மகா ராஜனுடைய முகத்தை நான் எப்படிப் பார்ப்பேன். மகாராஜன் என்வரவை வெறுக்காமல் ஏற்றுக் கொள்வாரா?

விப்ரமாவதி — தோழி! உனது முகத்தைப் பார்த்தவுடன் மகாராஜாதமது ஆத்மாவையே மறந்துவிடுவார். அப்படியிருக்க உன்னை அவர் எப்படி வெறுப்பார்?

மித்தி:— தோழி! [1] சௌபாக்கியமில்லாத என்னை ஏன் சௌபாக்கியமுள்ளவளாகப் பாவித்துப் பரிகாசம் செய்கிறாய்?

விப்ர:— தோழி! நான் ஸௌபாக்ய மென்று கூறியது உண்மை பொய்என்பதை இப்போதே யறிவாய். மற்றொன்று கேள்; தோழியினுடைய கண்கள் கலங்கித் தூக்கத்தினால் சுழலுகின்றன. உனக்குத் தூக்க மின்மைக்குக் காரணமென்ன?

மித்தி:— தோழி! ஒருவனுக்கு மனைவியா யிருக்கிற பெண்களுக்கே தூக்கம் துர்லபமாகிறது. அப்படியிருக்க, எல்லாருக்கும் இஷ்ட ஸ்திரீயா யிருக்கிற எனக்குக் கேட்க வேண்டுமா?

மித்தி:— சகி! முதலில் மகாராஜன் அதற்குமேல் காமன்! குரோதன், லோபன், அகங்காரன்—குறிப்பிட்டுச் சொல்வானேன்? இந்தக் குலத்தில் எவன் பிறந்தானோ அவன் குழந்தை யானாலும் வாலிபனானாலும் வயோதிகனானாலும் அவர்கள், மனதிலேயே குடிகொண்டிருக்கும் என்னை யன்றி இராப்பகலைக் கழித்தல் முடியாத காரியம்.

விப்ர:— காமனுக்கு ரதியும், குரோதனுக்கு ஹிம்ஸையும், லோபனுக்குத் திருஷ்ணையும் பரமப் பிரியைகளென்று கேள்விப்படுகிறேன். அப்படி யிருக்க அவர்களிடம் நீ உறவாடி ஏன் அசூயை யுண்டுபண்ணவில்லை.

மித்தியா:— சகி! அசூயையென்று சொல்வதெப்படி? அவர்கள் என்னைப் பிரிந்து கொஞ்ச நேரமும் மகிழ்ந்திரார்.

---

(1) நாயகனுடைய அன்பினாலும் அனுகூலத்தினாலும் மனைவிக் குண்டாகும் பெருமை

ப்ர:— சகி ! அதனால்தான் உன்னைப் போல பூமியில் ஸௌபாக்கிய முள்ளவளில்லை யென்று சொல்லுகிறேன். உனது ஸௌபாக்கியத்தின் மகிமையால் உனது சக்களத்திகள் தங்கள் மனதில் ஒன்றும் தோன்றாதவர்களாகி உனக்கு விருப்பமானவைகளைச் செய்கிறார்கள். சகியே ! இன்னுமொரு விஷயம். நித்திரை யின்மையால் கலங்கின கண்களுடனும் நடை தடுமாறுவதால் தடைபடும் கால்களி லுள்ள பாதசரங்கள் சப்திக்கவும் மனோகரமாய் நடந்து சென்று மகாராஜனுக்குச் சந்தேகமுண்டாக்கி விடுவாயென் றெண்ணுகின்றேன்

த்தியா:— இதில் சந்தேகிக்கத் தக்கதுயாது? மகாராஜாவினுடைய கட்டளையின் பேரில்தானே நாமிந்த அகாரியத்தைச் செய்கிறோம். தவிர, சகி ! நம்மைக்கண்ட மாத்திரத்தில் மனங்குளிர்ந்து மகிழ்ச்சி யடையும் ஆடவர் களிடத்தில் நமக்கென்னபயம்?

கா-ன்:— (பார்த்து) ஆ ! நமது இஷ்ட நாயகியான மித்தியாதிருஷ்டி வந்து விட்டாள். நிதம்ப பாரத்தினால் மெதுவாய் நடந்து வருகிறாள். சிறிது நழுவிப்போன புஷ்பமாலையை மறுபடியும் சூட்டிக்கொள்வது போற்காட்டி, கைகளை உயரத் தூக்கிக்கொண்டு, அதனால் நகக் காயங்களுடன் கூடிய கொங்கைகளை வெளியே காட்டுகிறாள். நீலோத்பல மலர் போன்ற கண்களின் பார்வையால் என் மனதை யபகரிக்கிறாள். மித்தியாதிருஷ்டி யானவள் தன் கைகளை வீசுவதால் அசைகிற கங்கண சப்தத்துடன் வருகிறாள்.

ப்ர:— இதோ ! மகாமோக ராஜனிருக்கிறார். பிரியசகி ! அருகே செல்வோம்.

த்தியா:— (அருகே சென்று) மகாராஜனுக்கு ஜய முண்டாகுக.

கா-ன்:— என் பிரிய நாயகியே ! மான்போன்ற நேத்திரமும் அழகான துடையு முடையவளே ! என் மடிமீதமர்ந்து கொள்; கொங்கைகளில் நகமழுந்தி யுண்டான வடுக்கள் என்மீது பொருந்தும்படி என்னை யணைந்து கொள். பரமசிவனதுமடிமீதிருக்கும் பார்வதியைப் போல் உனதுஅழகால் எனக்கு ஆனந்த முண்டாக்கு.

மித்தியா திருஷ்டி புன்னகையுடன் அவ்விதமே செய்கிறாள்.

பிர:— சகி! அதனால்தான் உன்னைப் போல பூமியில் சௌபாக்கிய முள்ளவளில்லை யென்று சொல்லுகிறேன். உனது சௌபாக்கியத்தின் மகிமையால் உனது சக்களத்திகள் தங்கள் மனதில் ஒன்றும் தோன்றாதவர்களாகி உனக்கு விருப்பமானவைகளைச் செய்கிறார்கள். சகியே! இன்னுமொரு விஷயம். நித்திரை யின்மையால் கலங்கின கண்களுடனும் நடை தடுமாறுவதால் தடைபடும் கால்களி லுள்ள பாதசரங்கள் சப்திக்கவும் மனோகரமாய் நடந்து சென்று மகாராஜனுக்குச் சந்தேகமுண்டாக்கி விடுவாயென் றெண்ணுகின்றேன்

த்தியா:— இதில் சந்தேகிக்கத் தக்கதுயாது? மகாராஜாவினுடைய கட்டளையின் பேரில்தானே நாமிந்த அகாரியத்தைச் செய்கிறோம். தவிர, சகி! நம்மைக்கண்ட மாத்திரத்தில் மனங்குளிர்ந்து மகிழ்ச்சி யடையும் ஆடவர் களிடத்தில் நமக்கென்னபயன்?

கா-ன்:— (பார்த்து) ஆ! நமது இஷ்ட நாயகியான மித்தியாதிருஷ்டி வந்து விட்டாள். நிதம்ப பாரத்தினால் மெதுவாய் நடந்து வருகிறாள். சிறிது நழுவிப்போன புஷ்பமாலையை மறுபடியும் சூட்டிக்கொள்வது போற்காட்டி, கைகளைஉயரத் தூக்கிக்கொண்டு, அதனால் நகக் காயங்களுடன் கூடிய கொங்கைகளை வெளியே காட்டுகிறாள். நீலோத்பல மலர் போன்ற கண்களின் பார்வையால் என் மனதை யபகரிக்கிறாள். மித்தியாதிருஷ்டி யானவள் தன் கைகளை வீசுவதால் அசைகிற கங்கண சப்தத்துடன் வருகிறாள்.

பிரா:— இதோ! மகாமோக ராஜனிருக்கிறார். பிரியசகி! அருகே செல்வோம்.

த்தியா:— (அருகே சென்று) மகாராஜனுக்கு ஜய முண்டாகுக.

கா-ன்:— என் பிரிய நாயகியே! மான்போன்ற நேத்திரமும் அழகான துடையு முடையவளே! என் மடிமீதமர்ந்து கொள்; கொங்கைகளில் நகமழுந்தி யுண்டான வடுக்கள் என்மீது பொருந்தும்படி என்னை யணைந்து கொள். பரமசிவனதுமடிமீதிருக்கும் பார்வதியைப் போல் உனதுஅழகால் எனக்கு ஆனந்த முண்டாக்கு.

மித்தியா திருஷ்டி புன்னகையுடன் அவ்விதமே செய்கிறாள்.

மகா-ன்—(ஆலிங்கனசுகத்தை அபிநயித்துக் காட்டுகிறான்) ஆச்சரியம்! நமது அன்பிற்குரிய மாதின் ஆலிங்கனத்தால் புதிதான யௌவனம் நமக்கு மறுபடியும் வந்துவிட்டது போலிருக்கிறது.

அதாவது—புதிதான யௌவன வயதின் பார்வையால் உண்டானதும் மனதையுருகச் செய்வதும்மற்ற விஷயங்களை யழித்து (மற்ற வஸ்துக்களின் அறிவற்று) ஆனந்தத்தில் பூர்ணமடைந்ததும் உனது ஆலிங்கத்தினால் உண்டானது மான மன்மத விகாரம் முந்தி யேற்பட்டது போலவும் கனிந்த அன்புடன் இன்னதென்று சொல்ல முடியாததுமாய் மறுபடியும் ஏற்பட்டு எனது அந்தக்கரணங்களை மறைக்கின்றது.

மித்தியா:—மகாராஜனே! நானு மிப்போது யௌவன மடைந்துவிட்டேன்! மனப் பூர்வமாய் ஏற்பட்ட இந்த அன்பானது எக்காலத்து மாறாது. என்னை எதன் பொருட்டு நினைத்தீர்களோ அதற்குத்தர விடவேண்டும்.

மகா-ன்:—அழகான துடை யுள்ளவளே! என்மனதிற்குப் புறம் பேயுள்ளவளை யல்லவா நானினைக்கவேண்டும். என் மனதாகிய சுவரில் பதுமைபோல் எப்போதும் இருப்ப வளல்லவா நீ!

மித்தியா:—பெரிய அனுக்கிரகம்.

மகா-ன்:—நீ எப்படி எல்லா விடங்களிலும் அழகுடையவளாய சஞ்சரிப்பாயோ அப்படியே நடந்துகொள். தவிர மற்றொன்று, வேலைக்காரியின் மகளான சிரத்தை யென்பவள் விவேகனுடன் உபநிஷத்தைச் சேர்க்க, (1) குட்டனீ சொரூபத்தை யடைந்திருக்கிறாள். ஆகையால், நமக்கு விரோதியாயும் பாபியாயும் பாவிகளை யனுசரிப்பவளு மாயு மிருக்கிற அந்த முண்டை (சிரத்தை) யை மயிரைப் பிடித்திழுத்துப் (2) பாஷண்டர்களிடம் கொண்டு போய்ச் சேர்க்கவேண்டும்.

---

(1) குட்டனி—கூட்டிக் கொடுப்பவள் என்று தமிழ் உலகத்தில் கூறுவார்கள்,

(2) வேதப் பிரமாண மில்லாதவர்கள்,

ரித்தி:—இந்த அற்புத விஷயத்தில் பிரபுவுக்குக்கவலை வேண்டாம். அந்த சிரத்தை ஒரு சொல்லினாலேயே தங்களுக்கு வேலைக் காரியாய் விடுவாள். இட்ட பணியை யேற்று நடத்துவாள். தர்மம்பொய், மோக்ஷம் பொய், வேத மார்க்கம் பொய், சுகத்திற்கு விக்கினங்களை யுண்டுபண்ணுவதான காரியங்கள் யாவும் பொய், சொர்க்கம் என்கிற (யாக) பலனும் பொய், என்று அடிக்கடி போதிக்கப் படுகிற சிரத்தையானவள் வேத மார்க்கத்தையே விட்டுவிடுவாள். உபநிஷத்தை யொழிப் பதைப்பற்றிக் கூற வேண்டுமா? மேலும் விஷய வானந்தத்திற் கெதிர் நடையான மோக்ஷத்தில் குற்றங்களைக் காண்பித்துச் சீக்கிரமாக உபநிஷத்தினிடம் கொண்டிருக்கும் படியான நிலைமைக்குச் சிரத்தையைக் கொண்டு வந்து விடுகிறேன்.

மகா,—அப்படிச் செய்வாயாயின் என் பிரியையான நீ எனக்கு நல்ல பிரியத்தைச் செய்தவளாவாய்.

[கட்டிக் கொண்டு முத்தமிடுகிறான்.

மித்தி;—பிரபுவாகிய தாங்களை இவ்விதம் பிரகாசமாக நடத்துவதில் எனக்கு வெட்கமுண்டாகவில்லை.

மகா.—அதிருக்கட்டும்; நமது வீட்டிற்குச் செல்வோம்.

எல்லாரும் போகிறார்கள்.

இரண்டாவதங்கம்.

முற்றிற்று.



## மூன்றாவதங்கம்.



சாந்தியும் கருணையும் வருகிறார்கள்.

**சாந்தி:**—(கண்ணீருடன்) அம்மா! அம்மா! எங்கிருக்கின்றாய்? உனது பிரியமான பார்வையை யருள். பயமற்ற மான்களுள்ள வனப் பிரதேசங்கள், புரண்டு புரண்டு ஓடிக் கொண்டிருக்கும் அருவிகளுள்ள மலைகள், புண்ணியத்தைக்கொடுக்கும் ஆலயங்கள் இவைகளிலும் சதாகாலமும் தவத்திலேயே சிந்தையுள்ளவர்களான வைகானஸர்களென்னும் முனிவர்களிடத்து மல்லவா உனக்கு எப்போதும் விருப்பம் அதிகம். அப்படிப்பட்ட நீ ஓர் பறையன் வீட்டிற்குட் பிரவேசித்த பசுவைப் போல் பாஷண்டர்களுடைய கைகளிற் சிக்கிக் கொண்டு எப்படி ஜீவிக்கிறாய்? நீ உயிருடனிருப் பா யென் ற எண்ணமும் விட்டு விடவேண்டும். ஏனெனில், சிரத்தை யானவள் என்னைப் பாராமல் ஸ்நானம் செய்வதில்லை. உண்பதில்லை. நீரருந்துவதுமில்லை. நானில்லாமல் ஓர்க்ஷண நேரமும் பிழைத்திருக்க மாட்டாள். ஆகையால் சிரத்தையில்லாமல் சாந்தியிருப்பது பரிகாசத்திற் கிடந்தான். ஆகையால் இப்பொழுதே சிதையடுக்கு. விரைவாக அக்கினிப் பிரவேசஞ்செய்து சிரத்தையுடன் சேர்கிறேன்.

**கருணை:**—(கண்ணீருடன்) சகி! மிகுந்த ஜ்வாலையுடனெரிகிற கொள்ளிக் கட்டைக் கொப்பான சகிக்கமுடியாத சொற்களைப் பேசி என்னை உயிரிழந்த சவத்திற் கொப்பாகச் செய்கிறாய். ஆகையால் சில காலம் என் உயிரைக் காப்பாற்று. இவ்விடத்திலிருந்து கொண்டு புண்ணியாச் சிரமங்களிலும் மூவர்களுமிருந்து வரும் கங்கா தீரங்களிலும் தேடுகிறேன். ஒரு சமயம் மகாமோகனிடம் பயந்து எங்கேனும் மறைந்திருந்தாலும் இருக்கலாம்.

**சாந்தி:**—சகி! ஏன் தேட வேண்டும்? தேடியாய் விட்டது. மணலில் திணை யென்னும் தானியத்தினால் அடையாளஞ் செய்யப்பட்டும் அநேக முனிவரால் ஆக்கிரமிக்கப் பட்டு முள்ள் ஆற்

றங் கரைகளிலும் சமித்துகள்,* சஷாலங்கள் இவைகள் நிறைந்த யாகஞ் செய்வோரின் கிருகங்களிலும் (பிரம சரியம் முதலிய) நான்கு ஆச்சிரமங்கள் இவைகளொவ்வொன்றிலும் நன்றாய்க் கவனித்துப் பார்த்தோம். இங்கெங்கும் சிரத்தை யென்கிறப் பேச்சேயில்லை.

கருணை:—சகி! சொல்லுகிறேன் கேள்! அவள் ஸத்துவகுண ரூபியான படியால், அவளுக்கு இத்தகைய கெட்ட நிலைமை யுண்டாகுமென நான் நினைக்கவில்லை. புண்ணிய சொரூபிகளான உத்தமிகள் நினைத்தற்கரிய ஆபத்தை யடைந்து அனுபவிப்பதில்லை.

சாந்தி:—சகி! தெய்வம் பகைக் கொண்டிருக்குமாயின் எதுதான் சம்பவியாது?

அதாவது:—

ஜனக ராஜனுக்குப் பெண்ணாகப் பிறந்த மகா லக்ஷிமி தசமுக (ராவணன்) னுடைய வீட்டில் இருந்தாள். மகா மகிமை பொருந்திய மூன்று வேதமும் அசுரர்களால் பாதாளத்திற்குக் கொண்டு போகப்பட்டன. மதாலஸா என்னும் கந்தர்வப் பெண்ணை பாதாள கேது வென்னும் அசுர ராஜன் மோசமாக அபகரித்துப் போனான். ஆகையால் தெய்வத்தின் செய்கை கொடுமையாகத் தானிருக்கும் (இவ்வாறு தெய்வத்தின் கொடுமையென நிச்சயித்து) இருக்கட்டும்; பாஷண்டர்களுடைய கிருகங்களுக்குச் சென்று தேடுவோம்.

கருணை—சகி! அவ்விதமே செய்வோம்.　　[சிறிது நடக்கிறான்.

கருணை:—(முன்னே பார்த்து அச்சத்துடன்) சகி! இராக்ஷஸன்! இராக்ஷஸன்!!

சாந்தி:—யாரவன் ராக்ஷஸன்!!

கருணை:—சகி! பார்! பார்! தேக மெங்கும் அழுக்கு வேர்வையால் ஒழுகிக் கொண்டிருக்கிறது. தவிரப் பார்க்கப் பயங்கரமாயும் வெறுக்கத் தக்கதாயு மிருக்கிறது. அவன் தலை மயிர் பிடுங்கப் பட்டிருக்கிறது. ஆடையும் உடுத்த வில்லை. மயில் தோகையைக் கையில் பிடித்துக்கொண்டிருக்கிறான். பார்; இந்த இடத்தை நோக்கிய வண்ணமாகவே வந்து கொண்டிருக்கிறான்.

* ஓர் விளையம்

சாந்தி:—சகி! இவன் இராக்கதனல்ல. வீரியமே யில்லாதவனல்லவா இவன்.

கருணை:—அங்ஙனமாயின் இவன் யாராகவிருப்பான்?

சாந்தி:—சகி! பிசா சென்றெண்ணுகின்றேன்.

கருணை:—சகி! சூரியனானவன் நீண்ட கிரணங்களுடன் உலக முழுதும் பிரகாசித்துக் கொண்டிருக்கையில் பிசாசுகளுக்கு இடம் ஏற்படுவதெப்படி?

சாந்தி:—அங்ஙனமாயின், இப்பொழுது தான் நரகக் குழியிலிருந்து கரை யேறிய ஓர் பாவிபாகவிருக்கக் கூடும். (பார்த்து ஆலோசித்து) ஆ! தெரிந்து கொண்டேன். மகா மோகனால் ஏற்படுத்தப் பட்ட திகம்பரசித்தாந்தம். ஆகையால் தூரவருகையிலேயே நாம் இவனைப் பார்க்கக் கூடாது.

[இருவரும் திரும்பிக் கொள்கிறார்கள்.

கருணை:—கொஞ்சக்காலம் இவ்விடத்திலேயே யிரு. சிரத்தையைத் தேடுகிறேன்.

(இருவரும் அப்படியே யிருக்கிறார்கள்.

திகம்பரசித்தாந்தம் வருகிறது.

திகம்பரன்:—அர்ஹத் என்கிற குருவுக்கு வந்தனம் செய்கின்றேன். ஒன்பது துவாரங்களுள்ள பட்டணத் (சரீரம்) தின் நடுவில் ஆத்துமா தீபம் போல் பிரகாசிக்கின்றது. இது தான் ஜைனப்பிரபு கூறியதும் மோக்ஷ சுகத்தைக் கொடுப்பதுமான பரமார்த்தம். (சிறிது தூரம் சென்று ஆகாயத்தில் செவி கொடுத்து) அடே! அடே!! சிராவக்கர்களே! கேளுங்கள்.

இச் சரீரம் மலமயமான பிண்டமாயிருக்கையில் (உலகத்திலுள்ள) ஜனங்கள் ஸ்நானஞ் செய்தார்களேயாயினும் சுத்தமென்பது எப்படி யுண்டாகும்? மகரிஷிகளை வணங்கிச்சரீரத்திலுள்ள நிர்மல சுபாவமான ஆத்துமாவை அறிந்து கொள்ள வேண்டும். ரிஷிகளைச் சேவிப்பதெப்படி யென்கிறீர்களா? அப்படியாயின் கேளுங்கள். ரிஷிகளைக் கண்டவுடன் தூரத்திலேயே யிருந்து காலில் விழுந்து நமஸ்கரிக்க வேண்டும்.

உபசரித்து நல்ல போஜனத்தை அவர்களுக்குச் செய்விக்க வேண்டும். அவர்களுடைய ஸ்திரீகளை அனுபவிக்கிற சாதுக்களிடத்தில் பொறாமை கொள்ளலாகாது.

(திறைக்குளே பார்க்கிறான்.)

சிரத்தே! இங்குவா!

[இருவரும் அச்சத்துடன் பார்க்கிறார்கள்.]

அவனுக் கேற்ற வேடந் தரித்துக்கொண்டு சிரத்தை வருகிறாள்.

சிரத்தை:—அரசவம்சத்துக் கட்டளையாது?

சாந்தி மூர்ச்சை யடைந்து கீழே விழுகிறாள்.

திகம்ப:—நமது சிஷ்யக் கூட்டத்தை நீ யொரு கணமும் விட்டு விலகாமலிருக்க வேண்டியது.

சிரத்தை:—சமூகத்திய உத்தரவுப்படியே.

போகிறாள்.

கருணை:—(சாந்தியை நோக்கி) பிரிய சகி! நீ ஆறுதலடைய வேண்டும். பேர் மாத்திரத்தில் நீ பயப்படக் கூடாது. ஏனெனில் பாஷண்டர்களுக்கும் தமஸினுடைய பெண் சிரத்தை யென்பவளொருத்தி யுண்டென்று நான் ஹிம்சையின் அருகே யிருந்து கேள்விப் பட்டிருக்கிறேன். ஆகையால் இவள் (தாமஸ) தமஸ்வரூபமான சிரத்தையாக விருக்க வேண்டும்.

சாந்தி—(ஆறுதலடைந்து) சகி! சரி.

இந்தத் தாரசை கொண்ட சிரத்தையானவள் ஒரு விதத்திலும் என் தாயாரை அனுசரிக்க மாட்டாள். ஏனெனில் இவள் கெட்ட நடத்தை யுள்ளவள். என் தாய் நல்ல நடத்தை யுள்ளவள். இவளைப் பார்க்கக் கஷ்டமாயிருக்கிறது. அவளைப் பார்க்கப் பார்க்கப் பிரியமாயிருக்கும். அதிருக்கட்டும்; ஸௌகதர் (பௌத்தன்)களின் இருப்பிடங்களிலும் அவளைத் தேட வேண்டும்.

சாந்தி கருணை இருவரும் கொஞ்ச தூரம் போகிறார்கள்.

சன்னியாச ரூபத்துடன் கையில் புத்தக
மெடுத்துக் கொண்டு பௌத்த சாஸ்திரி வருகிறார்.

துறவி—(ஆலோசித்து) ஓ! ஓ!! உபாசகர்களே! ஒரு க்ஷண நேரத்தில் நசித்துப் போகும் தன்மை யுள்ளவைகளும் உண்மையில் சொரூப மில்லாதவைகளுமான வஸ்துக்கள் யாவும் எதில் இருந்து கொண்டு வெளியில் இருப்பனவைகள் போல் தோன்றுகின்றனவோ, அதுவும் ஸம்ஸார வாசனை முற்றும் போய் விட்டமையால், விஷய விகாரமில்லாததுமான விக்ஞான பரம்பரை இப்போது பிரகாசிக்கின்றது.

கர்வத்துடன் நகர்கிறான்,

ஆச்சரியம்! நமது சுகததர்மமானது மிகவும் மேலானது அதில் சௌக்கியமும் மோக்ஷமும் உண்டாகின்றன.

அதாவது:—

வசிப்பதற்குரிய நேர்த்தியான வீடுகள், விருப்பதிற் கொத்த வேசிகள், வேண்டியபோது விரும்பியபடி சாப்பாடு, மிருதுவான படுக்கை, மிக்க அன்புடன் தங்கள் தேகத்தையே யளித்துக்கிரீடிக்கக் கூடிய மாதர்களுடன் கூடி அதனால் ஏற்படும் ஆனந்தத்தினால் நிலவெரிக்கும் இராக்காலங்களைக் கழிக்கும் சௌகரியம் ஆகிய இவைகள் கிடைக்கப் பெறுகிறோம்.

கருணை—சகி! வாசனையும் மஞ்சள் நிறமுள்ளதுமான ஆடையைத் தொங்க விட்டுக் கொண்டு சிகையுள்பட தலையை க்ஷளவரம் செய்து கொண்டு பனைமரம் போல் உயர்ந்த யாரோ ஒருவன் இங்கு வருகின்றான். இவன் யார்?

சாந்தி—சகி! இவன் பௌத்தாகமன். (பௌத்த சாஸ்திரம்)

துரவி—(ஆகாயத்தைக் காட்டி) ஓ உபாசகர்களே! ஓ சன்னியாசிகளே! முக்காலமு மறிந்த ஸுகததருடைய அமிர்தத்திற் கொப்பான இனிய மொழிகளைக் கேளுங்கள்.

புத்தகம் படிக்கிறான்.

மானிடர்களுடைய நற்கதியையும் துர்க்கதியையும் நான் ஞானக் கண்ணால் பார்க்கின்றேன். சகல பதார்த்தங்களும் ஸ்திரமான வைகளல்ல. ஸ்திரமான (அதாவது பரலோகத்தில்

சுக துக்கங்களை யனுபவிக்கும்) ஆத்மாவில்லை. ஆகையால் துறவிகள் பிறர் மனைவியை ஆக்கிரமிக்குங் காலத்தில் பொறுமையடையக் கூடாது. பொறுமை யென்பது தான் மனதிற்கு அழுக்கு என்று சொல்வது.

(திரைப் பக்கம் பார்க்கிறான்)

சிரத்தே! இங்கு வா!

சிரத்தை:—(பிரவேசித்து) சமுகம் உத்தர விடவேண்டும்.

துறவி:—உபாசகர்களையும் துறவிகளையும் வெகு காலம் ஆலிங்கனம் செய்துகொண் டிருக்க வேண்டியது.

சிரத்தை:—அரசனது கட்டளைப்படியே!

போகிறாள்

சாந்தி:—இவளும் தமோ குண சொரூபியான சிரத்தைதானோ?

கருணை:—ஆம் அப்படித் தான்.

சமணன்:—(பௌத்த சன்னியாசியைப் பார்த்து உரத்த குரலுடன்) அடே! இங்குவா! ஒரு கேள்விக் கேட்கிறேன்.

துறவி:—(கோபத்துடன்) அடேய்! பேய் போன்ற உருவமுடையவனே! ஏன் பிதற்றுகின்றாய்?

சம:—அடே! கோபங் கொள்ளாதே! அதை விட்டு விடு; சாஸ்திரத்திலுள்ளதைக் கேட்கின்றேன்.

துறவி:—சாஸ்திர மென்பது கூட உனக்குத் தெரியுமா? ஆகட்டும்; கொஞ்சம் பார்க்கிறேன். (கிட்ட வந்து) நீ கேட்ப தென்ன?

சம:—கண நேரத்தில் நாசமடையப் போகிற நீ ஏன் இப்படிப் பட்ட விருதம் அனுஷ்டிக்கிறாய்? சொல் பார்ப்போம்.

துறவி:—அடேகேள்! நமது பரம்பரைக் குள்ளான ஒரு விக்ஞானி ஸம்ஸார வாஸனையைத் துறந்து மோக்ஷ மடைவதன் பொருட்டே.

சம:—அடே மூடா! எப்பொழுதேனும் ஓர் காலத்தில் யாரேனும் ஒருவன் மோக்ஷ மடைவான். இப்பொழுது நாசமடையப் போகிற உனக்கு அவனால் என்ன உதவி கிடைக்கப் போகிறது. மற்றொன்று கேட்கின்றேன்· உனக் கிந்த தர்மத்தை உபதேசித்தது யார்?

துறவி:—சகலமு மறிந்த புத்த பகவானால் அருளிச் செய்யப்பட்ட தருமம் இது.

ச-ம:—அடே! புத்தர் எல்லாமறிந்தவ ரென்பதை நீ எங்ஙனம் கண்டாய்?

துறவி:—அடே! அவர் அருளிச்செய்த சாஸ்திரங்களே அவர் சகலத்தையுமறிந்த மகான் என்பதை விளக்குகின்றன.

ச-ம:—அடே! அறிவில்லாதவனே! அவருடைய சொல்லாலே அவரைச் சகலமு மறிந்தவ ரென்று கொள்வாயாயின் நானும் எல்லா மறிவேன். நீயும் என்க்கு உன் தந்தைப் பாட்டன் இவர்களோடு எழு தலை முறைக்கும் அடிமைப் பட்டவன்.

துறவி:—(கோபத்துடன்) அடே பாபி! பிசாசே! அழுக்காகிய சேறைப் பூசிக்கொண்டிருப்பவனே! நானு உனக் கடிமை!

ச-ம:—அடே! தேவடியா புருஷனே! துஷ்ட சன்னியாசியே நான் அதை உனக்குத் திருஷ்டாந்தமாகக் காண்பித்தேன். ஆகையால் உன் விருப்பத்தைத் தாராளமாய்ச்சொல்லுகிறேன் புத்தருடைய கொள்கையை யொழித்து அருகனது கொள்கையைக் கைக் கொண்டு திகம்பர விருதத்தையே நீ தரித்துக் கொள்.

துறவி:—நீ கெட்டுப் போனது மன்றிப் பிறரையுமா கெடுக்கின்றனை! உலகத்தில் உத்தமனென்று சொல்லப் படுகிறவன் எவனுவது சிறந்ததான சொர்க்கத்தைத் தவிர்த்து நிந்திக்கக் கூடிய இந்தப் பேய்த் தன்மையை உன்னைப் போல் விரும்புவானு? தவிர அருகனுடைய தரும ஞானத்தை நம்புகிறவர் யார்?

ச-ம:—நவக்கிரகம், நக்ஷத்திரம் இவைகளின் சாரங்கள், சந்திரசூரிய கிரகணங்கள், கெட்டுப் போன வஸ்துவை யடைதல், இவைகளைப் பற்றிய பரமார்த்த ஞானத்தை யடைந்திருப்பதாய்த் தெரியவருகிற படியால், அருகனனவர் எல்லா மறிந்தவ ரென்று சொல்லப் படுகிறார்.

துறவி:—அடே! வெகுகாலமாய் (அநாதி)ஏற்பட்டிருக்கும் சோதிடஞானத்திஞல் வஞ்சிக்கப் பட்ட நீ இப்படிப் பட்ட மகா கஷ்டமான விருதத்தை யடைந் திருக்கிறாய்.

அதாவது-(உன்மதப்படி)

தேகம் எவ்வளவினதோ அவ்வளவுள்ள ஜீவன்கள் வேறுசம்பந்த மில்லாமல் மூவுலகத்தையும் பார்ப்பதெப்படி? ஒரு குடத்திற்குள் ஏற்றி வைக்கப்பட்ட தீபம் எவ்வளவு பிரகாச முடையதாயினும் வீட்டிற் குள்ளிருக்கும் வஸ்துக் களைத் தெரியக் காட்டுமா?

ஆகையால் இகபர உலகங்களுக்கு விரோதமான அருக னுடைய மதத்தைக் காட்டிலும் பிரத்தியக்ஷத்தில் மிகுந்த சுகத்தை யளிக்கக் கூடிய புத்தமதமே மேலானதென வறி கிறோம்.

சாந்தி:—தோழி வேறோரிடத் திற்குப் போவோம்.

கருணை:—அப்படியே

இருவரும் ஒரு பக்கம்
திரும்பு கிறார்கள்.

சாந்தி:—இதோ எதிரில் சோமசித்தாந்தன் வருகின்றான். இருக் கட்டும் இங்கும் பார்ப்போம்.

1 காபாலிக ரூபங் கொண்ட சோமசித்தாந்தன்
பிரவேசிக்கிறான்.

சோம—(நடந்து கொண்டே) மனிதர்களுடைய எலும்புகளா லானமாலையை அழகான ஆபரணமாகப் பூண்டும் சுடுகாட்டில் வசித்தும் மனிதனுடைய மண்டை யோட்டிற் புசித்தும் யோக மென்கிற மையினால் தெளிவான கண்களை நானிப் போது பெற்று,உலகமுழுதும் தனித் தனியே வேறு பட்டா தாயினும் எல்லாம் பரமசிவனை யன்றி வேறில்லை யென்று காண்கின்றேன்.

சம:—யார்? இந்தப் புருஷன் காபாலி விருதத்தைக் கொண்டிருக் கிறான். இவனையும் கேட்கிறேன். (அருகே சென்று) மனிதர்

(1) மனிதன் மண்டை யோட்டைக் கையிலேந்திய ஒருவித மான லிங்கதாரி. இவர்கள் மதத்தில் பரமசிவன்பார்வதியுடன் கூடிச்சுகிப்பது போல் கைலாசத்தில் பார்வதிக் கொப்பான பெண்டிருடன் புருஷனும் சுகித்திருப்பது தான் மோக்ஷம். அதற்காகப் பரமசிவனை வாம மார்க்கத் தில் ஆராதிக்க வேண்டு மென்பது.

களுடைய எலும்புகள் மண்டைகள் இவைகளாலாகிய மாலை களைப் பூண்ட ஏ காபாலிக! உனது தர்மம் என்ன? எதை நீ மோக்ஷ மென்பது?

காபாலிகன்.—அடே!சமணா! முதலில் நீ எங்களுடைய தருமத்தை யறிந்து கொள். ஊனீர், நரம்புகள். கொழுப்புகள் இவை கள் கலந்த நரமாம்சங்களை அக்கினியில் ஓமம் செய்யும் எங் களுக்கு, மனிதனுடைய மண்டையோட்டில் ஊற்றின சாராயமே ஆகாரமாக ஏற்பட்டிருக்கிறது. அப்போது அறு க்கப் பட்ட உறுதியான கழுத்திலிருந்து பெருகும் உதிரப் பெருக்கினால் பிரகாசிக்கும் புருஷப்பசுவென்னும் பலிகளால் நாங்கள் ஸ்ரீமகா பைரவ சுவாமியை ஆராதிக்க வேண்டும்.

துறவி:—(செவிகளைப் பொத்திக் கொண்டு) புத்தரே! புத்தரே! கஷ்டம்!! இந்த தர்மாசாரணம் மிகவும் கடூரமாயிருக்கிறது.

சம:—அருகன்! அருகன்!! யாரோ ஒரு கொடிய பாவியால் இந்த அறிவிலி வஞ்சிக்கப்பட்டிருக்கிறான்.

கா-ன்:—(கோபத்துடன்) அடே பாபி! பாஷண்டர்களுக்குள் அத மனே! மொட்டைத் தலையா? பறையன் போல் வேடம் பூண் டவனே! மயிரைப் பிடுங்கிக் கொள்பவனே! அடே! பதினு ன்கு லோகங்களையும் படைத்துப் புரந்து பின் அழிப்பவரும் வேதாந்தங்களில் பிரசித்தமான மகிமையுள்ள வருமாகிய பார் வதிபதியான பகவான் பரமசிவன் வஞ்சனைக்காரரா? அங்ஙன மாயின் இந்த தர்மத்தின் மகிமையைக் காண்பிக்கிறேம் பார்!

பிரமன், விஷ்ணு, சிவன் முதலானதேவர்கள் மூவரையும் நான் இப்போது வரவழைப்பேன். ஆகாயத்தின் கண் உலா வும் நக்ஷத்திர கதிகளைத் தடுப்பேன். அநேக மலைகள், நகரங் கள் இவைகளுடன் கூடிய இந்தப் பூமியை நீரில் முழுகச் செய்து கண நேரத்திற்குள் அந்த நீர் முழுவதையும் பருகி விடுவேன்.

சம:—அடே காபாலிக! உன்னை ஒரு இந்திர ஜாலக்காரன் மாயை காண்பித்து மோசஞ் செய்திருக்கிறு னென்று சொல்வதும் அதனாலே தான்.

கா-ன்:—அடே பாபி! மீண்டும் பரமசிவனை இந்திரஜாலக்கா னெனத் தூஷிக்கின்றனையா? (தனக்குள்] இனி இவனுடைய

கெட்டநடத்தையைப்பொறுத்தல்கூடாது. [கத்தியைபிழுத்து] இது இவனுக்குப் போதும்! பயங்கரமான இந்தக் கத்தியால் இவனுடைய கழுத்தைத் துண்டிக்கிறேன்; அதிலிருந்து நுரைகளுடனும்கொப்பளங்களுடனும் மிகுந்து பெருகுகிற இரத்தப் பிரவாகங்களோடு டமரு என்னும் வாத்தியத்தின் டாம்! டாம்!! என்கிற சத்தத்தினால் பூத கணங்களை வரவழைத்து, அவைகளுடன் பரமேசுவரனுடைய மனைவியாராகிய காளியைத் திருப்தி பண்ணி வைக்கிறேன்.

கத்தியை ஓங்குகிறான்

சம:—ஓ பெரியவரே! பிறரைத் துன்புறுத் தாமையே மேலான தருமம்.

பௌத்த சன்னியாசியின் மடியில் உட்காருகிறான்

துறவி:—(காபாலிகனைத் தடுத்து) ஓ! ஓ!! பெரியவரே! விளையாட்டாக வாய்ச் சண்டை செய்த குற்றத் திற்காகக் கையாலாகாதவனாகிய இவனையடிப்பது நீதி யல்ல.

காபாலிகன்கத்தியைஇழுத்துக் கொள்கிறான்

சம:—(ஆறுதலடைந்து) பெரியவரே! கடுங் கோபந் தணிந்து விட்டதானால் நானொன்று கேட்கவேண்டுமென்றிருக்கிறேன்.

கா-ன்:—கேள்;

சம:—உங்களுடைய மேலான தருமத்தைக் கேட்டோம். உங்களுடைய மோக்ஷ சுகம் எப்படி?

கா-ன்:—கேள்;

சப்த ஸ்பரிசாதி விஷயசம்பந்த மில்லாமல் சுகம் என்பதை யாராவது எங்காவது கண்டதுண்டா? அப்படியிருக்க ஆனந்தமும் ஞானமுமில்லாமல் சிலைக் கொப்பாக விருக்கும் ஜீவன் வணங்கற் குரியதாவ தெங்ஙனம்? முத்தன் என்பவன் என்போன்ற திருமேனியை யடைந்து பார்வதிக் கொப்பான மங்கை யொருத்தியால் ஆனந்தத்துடன் ஆலிங்கனம் செய்யபட்டு சுகமனுபவிக்கிறானென்று பார்வதீபதியான பகவான் கூறியிருக்கிறார்.

துறவி:—பெரியவரே! ராகதுவேஷங்கள் ஒழிந்தாலல்லது முத்தி பெறுவதரிது.

சம:அடே காபாலிக! நீ கோபியாமலிருந்தால் சொல்லுகின்றேன் முக்தன் சரீரத் தோடும் இராகத்துவேஷங்களுடனும் இருப்பது கூடாமை.

கா-ன்:—(தனக்குள்) அசிரத்தையினுல் இவர்களுடைய மனம் கெட்டிருக்கிறது. இருக்கட்டும்; இப்படிச் செய்வோம் (வெளிப்படையாய்) சிரத்தே! இங்குவா?

காபாலினி ரூபத்துடன் சிரத்தை
வருகிறாள்.

கருணை:—சகி! யார்! யார்!! இவள் ரஜோ குணத்தின் பெண் சிரந்தை. மலர்ந்த நீலோத்பல மலரை யொத்த கண்களும் மானிடர்களுடைய என்புகளாலாகிய ஆபரணங்களணிந்தவளும் பெருத்த நிதம் பத்தாலும் ஸ்தன பாரத்தாலும் மெல்ல நடந்து வருகிறவளும் பூரண சந்திரனை நிகர்த்த முகத்துடன் கூடிய வளுமாகிய இந்த சிரத்தை மிகவும் அழகாயிருக்கின்றனள்.

சிரத்தை:-(அருகே வந்து ] இதோ இருக்கின்றேன். பிரபு கட்டளையிடவேண்டும்.

கா-ன்:—பிரியே! கெட்ட செய்கையில் அபிமானமுடைய இந்தத் துறவியை முந்திப் பிடித்துக் கொள்.

சிரத்தை பௌத்த சன்னியாசியைத் தழுவிக் கொள்கிறான்,

துறவி:—(ஆனந்தத்துடன் தானும் சிரத்தையை தழுவிக் கொண்டு மயிர்க்குச் செறிந்தது போல் அபிநயித்து இரகசியமாக ) ஆ! இந்தக் கபாலினி மிகவும் சுகத்தை யுண்டு பண்ணக் கூடியவள்.

அதாவது:—

பெருத்த கொங்கைகளையுடையகணவனற்ற மாதர்களில் அநேகரை அவர்களுடைய கொங்கைகள் தளரும்படி இருகைகளாலும் இறுகப் பிடித்து நான் ஆலிங்கனம் செய்துகொள்ள

வில்லையா? புத்தமதக் குருக்களை நூறு தடவை திட்டுகிறேன். இந்தக் காபாலினியின் பெருத்த கொங்கைகளைக் கட்டிக் கொள்வதால் உண்டாகும் சுகம் அந்த மதத்தில் எங்கேனுமுண்டா? ஆ! காபாலிகனுடைய செய்கையே புண்யம். ஸோமசித்தாந்தமே மேலானது. இந்த தர்மம் ஆச்சரியத்தை யுண்டு பண்ணுகிறது. ஓ பெரியவரே! எல்லா விதத்திலும் நாம் புத்தமதத்தை விட்டுவிட்டோம். காபாலிகமதத்தையங்கீகரித்தோம். ஆகையால் நீர் எனக்கு ஆசிரியன். நான் உமக்குச் சிடன். பரமேசுவரமத தீட்சையில் என்னைப் பிரவேசிக்கச் செய்யவேண்டும்.

சம:—அடே! சன்னியாசியே! காபாலினியைத் தீண்டியதால் நீ பிரஷ்டனாய் விட்டாய். ஆகையால் தூர விலகிப் போ.

துறவி,—அடே பாபி! காபாலினியின் ஆலிங்கனத் தாலுண்டான சுகமனுபவிக்கப் பெறாமல் நீ வஞ்சிக்கப் பட்டிருக்கிறாய்.

கா-ன்:—பிரியே! திகம்பரசன்னியாசியைப் பிடித்துக்கொள்.

காபாலினி சமணகனைத்
தொடுகிறாள்

சம:—(மயிர்க்குச் சடைகிறான்) அருகன்! ஆ! அருகன்!! காபாலினியின் ஆலிங்கனத்தாலுண்டான சுகம் மிகவும் ஆச்சரியம். அடியே! கட்டழகி! இன்னுமொருமுறை உன் ஆலிங்கனத்தைக்கொடு! கொடு!! (தனக்குள்) நமக்கு இந்திரிய விகாரம் மிகுதியாக வன்றோ உண்டாய் விட்டது. இதற்கேதாவது உபாயமுண்டோ? இப்போது எது பொருத்தமானது? ஆகட்டும் மயில் தோகையால் மூடிக்கொள்கிறேன். (வெளிப்படையாய்) இடைவெளியில்லாத கொங்கைகளும் அஞ்சினமான் விழிபோன்ற கண்களுமுள்ள அடி! காபாலினி? நீ உன்னுடைய விளையாட்டுடன் எல்லாவிடத்திலும் விளையாடிக் கொண்டிருப்பாயே யாகில், மாணுக்கர்கள் யாவரும் என்ன செய்யப் போகிறார்கள்? ஆச்சரியம் காபாலிகமதம் ஒன்றே சுகம் மோக்ஷம் இவைகளுக் குரியது. நானிப்போது உனக்கடிமையாய்விட்டேன். என்னையும் மகாபைரவருடைய தீக்ஷை பெற்றவனாகச் செய்யுங்கள்.

கா-ன்—உட்காரு

இருவரும் உட்காருகிறார்கள் காபாலிகன் பாத்திரத்தை யெடுத்துக்கொண்டு தியானம் செய்வதாய் அபிநயிக்கிறான்

சிரத்தை:—சுவாமி! பாத்திரத்தில் சாராயம் நிறைந்திருக்கிறது.

கா-ன்:—[தான் குடித்து மிகுந்ததை சமணனுக்கும் பௌத்த சன்னியாஸிக்கும் கொடுத்து) இது பரிசுத்தமும் அமிர்தமும் பானஞ்செய்பவர்களின் ஸம்ஸாரத்திற்கு மருந்தும் பிராணிகளின் பாசத்தை நாசம் செய்வதற்குத் காரணமுமானதென்று பைரவர் கூறியிருக்கிறார். ஆகையால் குடியுங்கள்.

இருவரும் தயங்குகிறார்கள்

சம—எங்களுடைய அருக மதத்தில் சுராபானம் செய்வது வழக்கமில்லை.

துறவி:—காபாலிகனால் எச்சல் செய்யப்பட்ட சாராயத்தை எப்படிக் குடிப்பேன்.

கா-ன்:—[சற்று யோசித்து இரகசியமாய்] சிரத்தே! என்னயோசிக்கின்றாய்? இவர்களுடைய பசுத்தன்மை இன்னமும் போகவில்லை. நமது முகசம்பந்த தோஷத்தினால் இந்த மதுவை அசுத்தமென நினைக்கின்றார்கள். ஆகையால் நீ உன்னுடைய வாய் எச்சலினால் இதைப் பரிசுத்தமாகச் செய்து இவர்களுக்குக்கொடு. ஏனெனில் மாதர்களின் வாய் எப்பொழுதும் சுத்தமென்று சாஸ்திரக்காரர்கள் கூறுகிறார்கள்.

சிரத்தை:— பகவான் உத்தரவுப்படியே செய்கிறேன்.

பாத்திரத்தைப் வாங்கித்தான்குடித்து மிச்சத்தை அவர்களுக்குக் கொடுக்கிறாள்.

துறவி:—மிகவும் நல்லது.

(பானபாத்திரத்தை வாங்கிக் குடிக்கிறான்

மதுவின் ருசி மிகவும் நன்றாயிருக்கிறது.

சுந்தரமானமுகமுள்ள மாதர்களின் வாயில் வைத்துக் குடித்து மிகுந்ததும் மெச்சத்தக்கதும் மகிழம் பூவைப்

போல் நறுமணமுள்ளதுமான மதுவை நான் வேசிகளுடன் எவ்வளவோ முறை அருந்தினதில்லையா? காபாலினியின் முகசம்பந்தத்தால் வாசனை பெற்ற மதுவை நுகராததோஷத்தினால் தான் தேவர்கள் அமிர்தத்தை விரும்புகிறார்கள்.

சம:—அடே! சன்னியாசி! முழுமையும் குடித்து விடாதே. காபாலினி குடித்த மிச்சத்தில் எனக்கும் கொஞ்ச மிருக்கட்டும். நிறுத்திவை.

துறவி சமணகனுக்குப் பானபாத்திரத்தைக் கொடுக்கிறான்

சம:—(குடிக்கிறான்) மது வெகுமாதுரியமா யிருக்கிறது. ஆச்சரியம்! ஆச்சரியம்!! அநேக காலமாய் அருகனுடைய மதத்திற் கிடந்துழன்று இத்தகைய மதுவின் ரஸம் கிடைக்கப் பெறாமல் மோசம் போனேன். அடே பிக்ஷுக! எனதங்கங்கள் சுழலுகின்றன. ஆகையால் நான் நித்திரை செய்யப் போகிறேன்.

துறவி:—அப்படியே செய்வோம்.

இருவரும் போகிறார்கள்

கா-ன்:—பிரியே! விலைக்கு வாங்காமலே இரண்டு அடிமைகள் கிடைத்தார்கள். ஆகையால் நர்த்தனம் செய்வோம்.

இருவரும்கூத்தாடுகிறார்கள்

ச-ம:—அடே! பிக்ஷுக! இந்தக் காபாலிகன், இல்லை இல்லை. ஆசாரியன்! காபாலினியுடன் கூட அழகாய்க் கூத்தாடுகிறான். நாமும் கூத்தாடுவோம்.

துறவி:—ஆசாரிய!! இந்த மதம் மிகவும் வியக்கத்தக்கது. இதிற் கஷ்டமில்லாமலே இஷ்டார்த்த சித்திகள் உண்டாகின்றன.

போதையால் தட்டுத் தடுமாறிக் கூத்தாடுகிறார்கள் சமணன் பெருத்து நெருங்கியுள்ள ஸ்தனங்களால் என்று தொடங்கி முன் சொன்னபடி சொல்லிக்கூத்தாடுகிறான்

கா-ன்:—என்ன ஆச்சரியத்தைப் பார்த்து விட்டாய்?

இந்த மதத்தில் சப்தஸ்பரிசாதி விஷயங்களை நீ விடாமலிருந்தாலுங் கூட அதிசீக்கிரத்தில் பிரபலமான பலனைக் கொடுக்கும் (அணிமை முதலான) அஷ்டசித்திகளும் சித்திக்

கின்றன. அப்படியிருக்க வசியம் (தன் வசமாக்கல்) ஆகர்ஷம் [தூரத்திலுள்ளதைத் தன் சமீபமிழுத்தல்) விமோசனம் (மயங்கச் செய்தல்) பிரசமனம் (அடக்குதல்) பிரக்ஷோபணம் (கலக்குதல்) உச்சாடனம் (விரட்டுதல்) இவைகள் முதலிய சாமானிய சித்திகளெல்லாம் வித்துவான்களுடைய யோகாப்பியாசத்திற்கு விக்கினங்களே தவிர வேறில்லை.

சம:--அடே காபாலிக! இல்லை இல்லை. ஆசாரிய! இல்லை. ஆசாரியர்களுக் கிறைவ! இல்லை? குலாசாரிய.

துறவி:---(சிரித்து) பழக்கமில்லாதிருக்கும் போது அதிக மாகமதுவைக் குடித்தமையால் இவன் தன் மனச்சுவாதீன மிழந்து விட்டான். ஆகையால் இவனுடைய போதையைத் தணிக்க வேண்டும்.

கா-ன்:---அப்படியே யாகட்டும் (தன் வாயிலிருந்த தாம்பூலத்தைச் சமுணனுக்குக் கொடுக்கிறான்.

சமணன்:---(தெளிவடைந்து) ஓ ஆசாரியரே ! இந்தச் சாராயத்தை வரவழைக்கச் சக்தியிருப்பது போல் ஸ்திரீ புருஷர்களையும் வரவழைக்க வல்லமை யிருக்கின்றதா?

கா.ன் :---ஏன் குறிப்பிட்டுக் கேட்கின்றாய்? வித்தியாதர ஸ்திரீயோ தேவஸ்திரீயோ ! நாகஸ்திரீயோ அல்லது யக்ஷஸ்திரீயோ யாராயினும் சரி ! இங்கு இக்கணமேவரவழைப்பேன். அன்றியும் எனது வித்தியாபலத்தால் எனக்கு இஷ்டமானதையும் மூவுலகங்களி லிருந்தும் கொண்டுவர வல்லமை யுண்டு.

சம:---ஓகோ நானிப்போது கணக் கெடுத்ததில் நாமெல்லாரும் மகாமோகனுக்குக் கிங்கரர்களென்று அறிந்து கொண்டேன்.

இருவரும்:--- நீண்ட ஆயுள்படைத்த நீ யறிந்தது சரியே.

சம:---அங்ஙனமாயின் ராஜகாரியத்தைப் பற்றிச்சிறிது ஆலோசிக்கபோம்.

கா-ன்:---அதென்ன?

சம:---சத்துவத்தினுடைய மகள் சிரத்தையை மகாராஜனது தாவைக் கொண்டு வரவழைக்க வேண்டும்.

கா-ன்:—சொல் ! எங்கே அந்த தாசி புத்திரி? நான் அவளை க்ஷணை யில் என்வித்தியாபலத்தால் கொண்டு வருகிறேன்.

சமணகன் மாக்கல் போன்ற தொன் ருல்எழுதிக்கணக்கிடுகிருன்.

சாந்தி:— தோழி ! இந்தத் துஷ்டர்களுடைய சம்பாஷணை நமது தாயைப் பற்றியது போற் காண்கின்றது.கவனிப்போம்.

கருணை:— தோழி ! கவனிப்போம்.　　[இருவரும் கேட்கிருர்கள்.

சம:—(கணக்கிட்டு) அந்த சிரத்தை யென்பவள் நீரிலுமில்லை நிலத்திலுமில்லை. மலைக் குகைகளிலுமில்லை. மைதானத்திலு மில்லை. பின்னெங்கிருக்கின்ருளெனில், விஷ்ணு பக்தியுடன் கூடி. மகாத்மாக்களின் இருதயத்தில் வாசஞ் செய்கின்ருள்.

கருணை:— தோழி ! தெய்வாதீனமாய் உனக்கு ஜயமுண்டாகிறது. நமதுசிரத்தாதேவி, விஷ்ணுபக்திக்கருகேயிருக்கின்றனளாம்.

சாந்தியும் சந்தோஷப் படுகிருள்

துறவி:— காமனை விட்டு விலகிச் சென்ற தர்மம் எங்கிருக்கின்றது?

சம:—(முன்போற் கணக்கிட்டு) நீரிலுமில்லை. நிலத்திலு மில்லை. மைதானங்களிலு மில்லை. பின்னெங்கெனில்' விஷ்ணுபக்தி யுடன் கூட மகாத்மாக்களின் மனதில் வசிக்கின்ருன்.

கா-ன்:—(துக்கத்துடன்) ஆ ! ஆ !! மகாராஜனுக்கு மகா கஷ்டம் வந்து விட்டது. பிரபோதோத்பத்தி யென்னும் சித்திக்கு விஷ்ணுபக்தியென்னும் தேவிதான் மூலம். சத்துவத்தின் பெண்ணுகிய சிரத்தையும் அவளையே யனுசரிக்கிருள். தர்மனும் காமனை விட்டு அங்குபோய்ச்சேர்ந்து விட்டான்.இப்படியானல் விவேகனுடைய காரியம் சித்தி பெற்று விட்டதாகவே கருதவேண்டும். ஆயினும் பிராணனை விட்டேனும் மகாராஜா வின் காரியத்தை நடத்தவேண்டும். ஆகையால் தர்மம் சிரத்தை இவ்விருவரையும் இங்கு வரவழைப்பதன் பொருட்டு மகா பைரவி யென்னும் வித்தையை அனுப்புவோம்.

சாந்தி கருணை இவ்விருவரும் நீங்க லாகமற்றவர்கள்போய்விட்டார்கள்.

சாந்தி:—தோழி இந்தத் துஷ்டர்களுடைய தீயமுயற்சியைவிஷ்ணு பக்திக்குத் தெரியப் படுத்துவோம்.

இருவரும் போய்விட்டார்கள்

மூன்ருமங்கம்.

முற்றிற்று.

## நான்காவதங்கம்.

மைத்திரீ வருகிருள்.

**மைத்திரீ:**—மகா பைரவியால் நேரிட விருந்த கஷ்டத்திலிருந்து நமது அன்புள்ள தோழி சிரத்தையை மகிமைபொருந்திய விஷ்ணுபக்தி காப்பாற்றினுளென்று எனக்கு முதிதை (சந்தோஷம்) தெரிவிக்க அறிந்தேன். ஆதலால் பிரிவாற்ருமையால் வருந்தும் மனதையுடைய யான் எனதன்புள்ள தோழியாகிய சிரத்தையை எப்போது காண்பேன்.

[போகிருள்.

சிரத்தைபிரவேசிக்கிருள்.

**சிரத்தை:**—(பயத்தினுல் நடுக்கங் கொண்டு) கோரரூபியும், மானிடர்களுடையமண்டையோடுகளைக் கர்ணுபரணங்களாகக்கொண்டவளும் கண்களைத் திறந்து பார்க்கும்போதே மின்னற் குவியல்களை வெளியிடுபவளும், நெருப்பின் ஜ்வாலையை யொத்த பொன்னிறமான தலைமயிரை யுடையவளும் அச்சத்தைக் கொடுக்கும் சரீர முடையவளும் சந்திரகலைபோன்ற தெற்றிப் பற்களுக்கிடையில் துடித்துக் கொண்டிருக்கும் நாவினையுடையவளுமான மகாபைரவி இப்போதும் என் கண்ணுக் கெதிரில் நிற்பது போல் தோன்றுகின்றனள். ஆகையால் என் மனம் வாழமரத்தை யொத்து நடுங்குகிறது.

**மைத்தி:**—ஆ! இதோ! எனது தோழி சிரத்தையின் தேகம் பயத்தால் நடுங்குகிறது. நான் வந்து எதிரே நிற்பதைப் பார்த்தும் ஏதோபேசிக்கொண்டிருக்கின்றனள். ஆகையால் நான் போய்ப் பேசுகிறேன். அடி! அன்புள்ளதோழி! சிரத்தே! என்ன கவலை யுற்றதுனக்கு? என்னைக் கூடக் கவனிக்காம லிருக்கின்ருயே.

**சிரத்தை:**—(பார்த்துப் பெருமூச் செறிந்து) ஓ! ஓ! எனது உயிர்த் தோழி! மைத்திரியா! ஏதோழி (1) காளராத்திரியினுடைய

(1) காளராத்திரி—பிரளயத்தில் உலகத்தையொழிக்கும்தேவதை

பயங்கரமான பற்களுக்கிடையே சென்றனன் இதே ஜன்மத்தில் அதேசகியாகிய உன்னை மறுபடியும் பார்க்க நேர்ந்ததே. (சந்தோஷம்)வா என்னைக்கெட்டியாகக்கட்டிக்கொள்.

*மைத்திரி தழுவிக் கொள்கிறாள்*

மைத்தி:—தோழி! அந்த மகாபைரவியை, விஷ்ணுபக்தி தன் கைக்குள்ளடக்கிய பின்னும் ஏன் உனது அங்கங்கள் நடுங்குகின்றன.

சிரத்தை:—

*மகாபைரவியின் சொரூப இலக்கணத்தை முன்போல் வருணித்து நடுங்குகிறாள்*

மைத்தி:—அந்தோ! ஆம்அந்தத் துஷ்டையாகிய பைரவி கோரரூபிதான். அவள் உன்னிடம் வந்து உன்னை என்ன செய்தாள்?

சிரத்தை:—பயங்கரரூபியான மகாபைரவியானவள்குடைபறந்துவிழுவதுபோல் விழுந்து ஒருகையால் எனதுஇரண்டு கால்களையும் பிடித்துக் கொண்டு மற்றொருகையால் தர்மத்தை எடுத்துக் கொண்டு, தன்வாயின் இருபக்கத்திலும் இரண்டு மாமிசத் துண்டு தொங்க ஆகாயத்தில் பறந்து செல்லும் ஓர் பெண் கழுகைப் போல் வேகமாய் ஆகாயத்தில் கிளம்பி விட்டாள்.

மைத்தி:—ஆ கஷ்டம்! கஷ்டம்!

*மூர்ச்சை யடைகிறாள்*

சிரத்தை:—தோழி! மனதைச் சமாதானப் படுத்திக்கொள்.

மைத்தி:—(ஆறுதலடைந்து) பிறகென்ன நடந்தது சொல்.

சிரத்தை:—பிறகு நான் போட்ட சத்தத்தைக் கேட்டுத் தயையடைந்த விஷ்ணுபக்தி தேவியானவள் தன் புருவத்தை நெறித்து பயங்கரமாக விழி சிவக்கக் கோபங் கொண்டு ஒருபார்வை பார்த்தாள். அந்தப் பார்வை விழுந்த மாத்திரத்தில் வச்சிராயுதத்தால் அடியுண்ட மலைச் சிகரத்தைப் போல் எலும்பும் நரம்பும் நொறுங்கிப் போம்படி அவள் பூமியில் விழுந்தனள்.

மைத்தி:—சினமடைந்த புலி வாயிலிருந்து நழுவிய மானைப்போல் உயிர் தப்பிய பிரிய சகியான உன்னை தெய்வானுகூலத்தால் கண்டேன்.

சிரத்தை:—பிறகு விஷ்ணுபக்திதேவி ஆத்திரங்கொண்டு, "என்னைக் கூட அவமதித்து வேலை செய்து வரும் துஷ்டனாகிய மகா மோகனென்னும் பாபியை அடியோடு தொலைத்து விடுகின்றேன்" எனப் பகர்ந்து என்னை நோக்கி "சிரத்தே! நீ விவேகனிடம் போய், காமம், குரோதம், லோபம் முதலியவர்களை ஜயிக்க வேண்டுமென்றும், அப்பொழுது தான் வைராக்கியமுண்டாகுமென்றும் விஷ்ணுபக்தி யானவள் காலத்திற்குத் தக்கபடி பிராணயாமம் முதலியவைகளைச் செய்து உங்களுடைய சைதன்னியத்திற்குப்பலத்தையுண்டுபண்ணுவாளென்றும் ருதம்பரை (பிரக்ஞை) முதலான தேவர்களும் சாந்தி முதலானவர்களின் சாமர்த்தியத்தினால் உபநிஷத் தேவியுடன் கூடிய உனக்கு(ஆத்மா)பிரபோதம் உண்டாக்கும் பொருட்டுச் சகாயஞ் செய்வார்களென்றும் சொல்" எனக் கட்டளையிட்டாள். ஆகையால் நானிப்போது விவேகனிடம் போகப் புறப்பட்டேன். நீ என்ன செய்துகொண்டு காலத்தைக் கழிக்கிறாய்?

மைத்ரி:—நாங்கள் நான்கு சகோதரிகளும் (மைத்திரி, முதிதா, கருணை, உபேக்ஷை) விஷ்ணுபக்தியின் உத்தரவுப்படி விவேக மகாராஜனது காரியசித்தியின் பொருட்டு மகாத்மாக்களின் இருதயத்தில் வசிக்கின்றோம்.

அவர்கள் சுகமுள்ளவனிடத்தில் என்னையும் துக்கமுள்ளவனிடத்தில் கருணையையும் புண்ணியத்தைக் கொடுக்கும் கிரியைகளில் முதிதையையும் துர்புத்தியுள்ளவனிடத்தில் உபேக்ஷையையும் தியானம் செய்கிறார்கள். இதனால் ராகம், லோபம், துவேஷ, முதலான தோஷங்கள் கலகத்தைச் செய்யினும் அந்தராத்மா நிர்மலசுபாவத்தை யடைகிறது. அப்படியிருப்பதால், அவருடைய சுகத்தின் பொருட்டு நாங்கள் நால்வரும் இவ்வாறு நாட்களைப் போக்குகிறோம். இப்பொழுது நமது பிரியசகி உபநிஷத்தேவி எங்கிருக்கிறாய்?

சிரத்தை:—ராடம் என்று தேசமிருக்கிறதாகவும், அங்கு கங்காநதியினருகே சக்ரதீர்த்தத்தில் மீமாம்சையறிந்த மதியுடன் பிராணனையடைக்கிக் கொண்டு கலங்கின அந்தராத்மாவொடு விவேகன் உபநிஷத் தேவியைக் கூடுவதற்காகத் தவம் புரிகின்றான்.

மத்தி:— அங்ஙனமாயின் நீசெல், நானும் என்னுடைய கட்டளையை நிறைவேற்றுகிறேன்.

ரத்தை:— அப்படியே செய்வோம்.

இருவரும் போய்விட்டார்கள்

விஷ்கம்பம்

அரசனும் வாயிற்காப்போனும் வருகிறார்கள்.

அ:— அடேபாவி ! மகாமோகப் பயலே ! நாலாவிதத்திலும் இந்த மகாஜனத்தை நீ கெடுத்துவிட்டாய்.

அதாவது:—

உபத்திரவமற்றதும், அளவிறந்த மகிமை யுள்ளதும் சித்தாந்த ரூபமுள்ளதும் அலைகளில்லாததுமான பிரம மாகிய சமுத்திரத்தில் இந்த மூட ஜன்மமானது தானே நவே மூழ்கியிருந்து மிகச் சிரமத்தை யடைந்தபோதும் அந்த நீரை யணுவளவும் அருந்துவது கிடையாது. உண்மையில் சிறிதும் ஸாரமில்லாத மிருகதிருஷ்ணிகை யென்னும் நீரில் விழுந்து குடிக்கின்றது. ஆசமனம் செய்கின்றது. மூழ்கு கின்றது. மிதக்கின்றது. தவிர ஸம்ஸார மென்னும் சாகரத்தை நடத்துகிற மகாமோகனுக்கு அக்ஞானமே மூலம். அந்த அக்ஞானத்தை தத்துவ ஞானத்தால் தான் ஒழிக்க வேண்டும். ஏனெனில், அக்ஞானத்தை மூலமாகக் கொண்ட இந்த சம்ஸாரமென்னும் மரத்தை யடியோடொழிப்பதற்கு ஸ்ரீ விசுவேசுவரரை யாராதிப்பதா லுண்டாகும் தத்துவ ஞானத்தைக்காட்டிலும் உபாயம் வேறு இல்லையென்று சொல் லப் படுகிறது.

மேலும், "நல்ல செய்கைகளை நடத்த முந்துபவர்களுக் குத் தேவர்களும் சகாயம் செய்வார்கள். கெட்டவழியிற் சொல்லுபவர்களை உடன் பிறந்தோனும் திரும்பிப் பாராமல் விட்டு விடுவான்" என்று தத்துவ ஞானிகள் சொல்லுகிறார்கள். காமாதிகளை வெல்ல இங்ஙனமேமுயற்சிசெய்ய வேண்டுமென விஷ்ணுபக்தி (சிரத்தைமூலமாக) செய்தியனுப்பி யிருக்கின்ற னள். தானும் நமது செய்கையில் அபிமானம் வைத்திருப்ப

தாகத் தெரிவித்திருக்கின்றனன். அவர்களுள் முக்கிய வீர னாகாமனை வஸ்து விசாரத்தால் தான் வெல்லக் கூடும். ஆகை யால் (மற்றவைகள்) இருக்கட்டும். நமது ஜயத்திற்கு, அந்த வஸ்துவிசாரனையே அனுப்புகிறேன். வேதவதி! வஸ்துவிசார னைக் கூப்பிடு.

வாயி:— அரசன் கட்டளைப்படியே செய்கிறேன்.

போகிறாள்

வஸ்து விசாரனுடன் பிரவேசிக்கிறாள்

வஸ்து;—ஆச்சரியம்! சிறிதும் யோசனையின்றி (பெண்களின்) அழகிற் கொண்ட ஓர்வித அன்பால் பெருகிய காம மென் னும் துஷ்டனால் உலகம் வஞ்சிக்கப்பட்டது. அல்லது துராத் மாவாகிய மகாமோகனும் என்று கூறினும் பொருந்தும்.

அதாவது:—

ஆடவன் எத்தனை அறிவு படைத்திருப்பினும் அவன், "என் ஆசைக் குரியவளொன்றும் நீலோத்பலம் போன்ற கண்களுள்ளவளொன்றும் பெருத்த நிதம்பமுடையவ ளென் றும் இடைவெளியின்றிப் பெருத்துயர்ந்த கொங்கைக ளுடையவ ளொன்றும் தாமரை மலரை யொத்த அழகிய நேத்திரமுள்ளவளொன்றும் அழகான புருவங்க ளுள்ளவ ளொன்றும்" அசுத்த பதார்த்தங்களால் நிர்மாணிக்கப்பட்ட ஓர் அங்கனையைப் பார்த்து மதத்தை யடைகிறான், ஆனந் திக்கிறான், விளையாடுகின்றான். புகழ்கின்றான். அந்தோ! மோகத்தினால் விளைந்த தீங்கல்லவாயிது!

தவிர, வஸ்துவின் சொரூபத்தை உள்ளபடி ஆராயும் புத்தி மான்களுக்குக் கூட, மாமிசக் குழம்பினாலாக்கப் பட்டதும் எலும்புருவமானதும் இயல்பிலேயே துர்நாற்றம் வீசுவதால் வெறுக்கத்தக்கதாயும் வேடதாரி யென்று சொல்லும்படியாயு மிருக்கிற மாதர்களென்றால் ஒழிவே கிடையாது. ஆதலால் இதில் மற்ற வஸ்துக்களின் குணங்களுடைய அத்தியாசம் (அக்ஞானத்தினால், ஒன்றை மற்றொன்றாக நினைப்பது) தெளி வாகவே யிருக்கிறது.

அதாவது:—

முத்தாரங்களையும் ஒன்றோடொன்று மோதிச் சத்திக்கும்படியான இரத்தின மிழைத்த சொர்ண பாதசரங்களையும் கலவைச் சந்தனங்களையும் சுகந்த முள்ளதும் வியக்கத்தக்கதுமான புஷ்பமாலைகளையும் மாதர்களணியப் பார்த்து ஆனந்திக்கிறார்கள் அறிவிலிகள். உள்ளும்புறம்பும் பார்க்கிறவர்களுக்கோவெனில் நரகமே பெண்ணென வாயிற்றெனத் தோன்றும்.

(ஆகாயத்தை நோக்கி) அடேபாபி! காமனென்னும் பறப்பயலே! நீ யேனிப்படி யாதொரு ஆதாரமு மின்றி உலகத்தை வருத்துகின்றாய்? நீ வருத்துவதால் ஜனங்கள் நினைப்பதைக் கவனி-

"சந்திர பிம்பத்தை யொத்த அழகிய முகமுள்ள பெண் என்னை விரும்புகிறாள். நீலோத்பல மலரைப் போன்ற கண்களுள்ள இவள் ஆனந்தத்துடன் பார்க்கிறாள். பெருத்த கொங்கைகள் இளகும்படி ஆலிங்கனம் செய்து கொள்ளுகிறாள்" என்றேயாம்.

அடே மூடா! மிருகத்திற்கு ஒப்பானவனே! உன்னை விரும்புவதும் உன்னைப் பார்ப்பதும் யார்? மாமிசத்தாலும் எலும்புகளாலும் உண்டு பண்ணப்பட்ட பெண் என்று கருதுகின்றாயே அவளல்ல; அவள் ஒன்றுமறியாள். யாதெனில், அவளுக்குள்ளிருப்பவனும் சரீரமற்றவனுமான புருஷனை பார்ப்பவன். (விரும்கிறபுவன்)

வாயி—மகா கௌரவமுள்ள தாங்கள் இப்படி வரவேண்டும்.

இருவரும் போகிறார்கள்

வாயி:—இதோ மகாராஜன் வீற்றிருக்கிறார். தாங்கள் அவரிடம் போகலாம்;

வஸ்:—(அருகே சென்று) மகாராஜனுக்கு ஜயமுண்டாகுக. வஸ்துவிசாரன் வந்தனம் செய்கின்றேன்.

அ:—இதோ இப்படி யுட்காருங்கள்.

வஸ்:—(உட்கார்ந்து) சுவாமி தங்களுடைய ஊழியனாகிய எனக்குத் தங்களுடைய கட்டளையினால் அனுக்ரகம் செய்யவேண்டும்.

அ:—மகாமோகனுடனமக்கு அமர்புரியநேரிட்டிருக்கிறது. இந்த யுத்தத்தில் அவனுக்கு முக்கிய வீரனாக விருப்பவன் காமனே. அவனுக்கு எதிரியாக நாம் உன்னைக்குறிப்பிட்டிருக்கின்றோம்.
வஸ்:—தன்னியனானேன். ஏனெனில் பிரபுவே என்னை இதற்கு நியமித்தீர்களல்லவா?
அ:—நீ எந்த ஆயுதவித்தையால் காமனை ஜயிக்கப் போகின்றாய்.
வஸ்—ஆ! ஐந்து புஷ்பபாணங்களையுடைய மன்மதனை வெல்ல ஆயுதமெடுக்கவேண்டுமா?
பாருங்கள்:—
ஸ்திரீகளைப் பார்ப்பதற்கும் அவர்களை யடிக்கடி நினைப்பதற்கு முள்ள வழியை மூடி, முடிவில் விரஸமாயிருக்கும் தன்மையையேனும் தேகத்திலுள்ள வெறுக்கத்தக்க விஷயத்தையேனும் அடிக்கடி சிந்தித்துக் காமனை யடியோடு தொலைத்து விடுகின்றேன்.
அ:—நன்று! நன்று!!
வஸ்:—மேலும்—
பரவிய மணற் குன்றுகளுள்ள ஆறுகளும் ஓயாமல் ஓடுகிற அருவிகளால் வழவழப்பாகச் செய்யப்பட்ட கற்களுள்ள வரைகளும் நெருங்கி மரங்களடர்ந்த வனங்களும் வியாசமுனிவரின் வேதாந்த வாக்கியங்களும் ஞானிகளுடையநட்பும் ஆகிய இவைகள்எனக்கிருக்கின்றன. அப்படியிருக்க, மாம்சமும்அணு ரும்நிறைந்ததேகமுடையமாதர்களெங்கிருப்பார்கள் அவர்களை யனுசரிக்குங் காமனும்எங்கிருப்பான்? காமனுக்குப் பெண்ணே முக்கியமான அஸ்திரம். ஆகையால் அதை வென்று விடின் அதற் குதவியாகநிற்கும் மற்றவைகளெல்லாம் வீணாக முடிந்து நாசமுறும்.
அதாவது—
சந்திரன், சந்தனம், சந்திரிகையால் பிரகாசிக்க இரவு, வண்டுக் கூட்டங்களிடும் ரீங்கார சப்தத்தோடு கூடிய அழகிய உத்தியானவனம், வசந்தகாலத்தின் பெருமை, காதுக்கினிமையாகச்சப்திக்கும் மேகங்கள் உலாவும் மழைகாலம்மெதுவாக வீசும் அடப்பமரக்காற்று சிருங்காரம் முதலிய காமனுடைய நண்பர்கள், நான் ஸ்திரீயை ஜயித்து விடின் ஜயிக்கப்பட்டார்களென்றே சொல்லவேண்டும்.

ஆகையால் அதிகத் தாமதம் வெண்டாம். பிரபு ஆக்ஞா பிக்க வேண்டும்.

அப்படிப்பட்ட யான் பல விடங்களுக்குச் சென்று அம்புகளை யொத்தவிசாரணைகளால் பகைவர்களின் சேனைகளை யொழித்து, காண்டீவத்தை வில்லாகக் கொண்ட அர்ச்சுனன் கௌரவர்களுடைய சேனைகளைத் தொலைத்து விந்து தேசத் திறைவனுகிய ஜயத்திரதனைக் கொன்றதுபோல் காமனைக் கொல்லுகிறேன்.

அ:—அங்ஙனமாயின் பகைவர்களை வெல்ல நீ தயாராகலாம்.

வஸ்து:—அரசன் கட்டளைப் படியே.

வந்தனம்செய்து போகிறாள்.

அரசன்:—வேத்திரவதி! குரோதனை ஜயிப்பதற்காக க்ஷமையைக் (பொறுமை) கூப்பிடு.

வாயி:—அரசனது ஆக்ஞைப் படியே!

போகிறான்.

க்ஷமையுடன் வருகிறாள்.

க்ஷமை:—சினமென்னும் இருட்டு, அலைகளையொத்த பயங்கரமான புருவங்கள் இவைகளால் அச்சமுண்டாக்குகிறவனும் அந்தி வேளையின் சூரியகாந்தியைப் போல் சிவந்த கண்களுள்ளவனு மாகிய பகைவனின் நிந்தை மொழிகளை, நிலைகுலை யாமலிருக் கும் நிர்மல சமுத்திரம் போல் ஆழ்ந்த மனமுள்ளவர்களும் தைரிய வான்களுமான வீரர்கள் பொறுத்துக் கொள்கிறார்கள். (கர்வத்துடன் தன்னைப்பார்த்து)குரோதனைவெல்ல நானொருத் தியே சக்திவாய்ந்தவள். என்னனில் பேசிச் சிரமப்பட வேண் டியதில்லை. தலை வலியுண்டாகாது. மனதுக்குத் தாபமுண்டா காது.உடம்பு நலுங்காது.தொந்தரை முதலான அனர்த்தங் களும் கிடையா?

இருவரும் நடக்கிறார்கள்.

வாயி:—இதோ இராஜா யிருக்கின்றார். பிரியசகி கிட்டப் போகலாம்.

க்ஷமை:—(அருகே சென்று) மகாராஜனுக்கு ஜயமுண்டாகக் கட வது. மகாராஜனது ஊழியக்காரியாகிய க்ஷமை இதோ அஷ் டாங்க நமஸ்காரம் செய்கின்றேன்.

நமஸ்கரிக் கின்றாள்.

அ:—க்ஷமே! இதோ இப்படி உட்கார்.

க்ஷமை:—(உட்கார்ந்து)மகாராஜா, ஆக்ஞைசெய்ய வேண்டும். இந்த ஊழியக் காரியை அழைத்ததன் காரணம் யதோ?

அ:—இந்த யுத்தத்தில் குரோதன் என்னும் துஷ்டனை நீதான் ஜயிக்கவேண்டும்.

க்ஷமை:—மகாராஜனது உத்திரவுகிடைத்தால், நான் மகாமோகனைக் கூட ஜயித்து விடுவேன். அப்படி யிருக்க, அவனுக்கு அனுசரனாக விருக்கும் குரோதனை ஜயிக்கச் சொல்லவும் வேண்டுமா? ஆகையால் நானிப்போதே சென்று, எப்போதும் பாபகர்மங்களையே செய்பவனும் வேதாத்தியயனம் தேவதாராதனம் பிதுர்க் காரியங்கள், தவம், இப்படிப்பட்ட நற்கருமங்களுக்குக் காரணமில்லாமலே இடையூறு செய்பவனும் கண்களால் தீப்பொறிகளைச் சிந்துபவன் போலிருப்பவனு மாகிய குரோதனைத் துர்க்காதேவிமகிஷாசுரனைக்கொன்றதுபோல் கொன்று விடுகிறேன்.

அ:—க்ஷமே! நீ குரோதனை எந்த உபாயத்தைக் கொண்டு ஜயிக்கப் போகின்றாய். அதை நான் அறிய விரும்புகின்றேன்.

க்ஷமை:—மகாராஜாவே இதோ தெரிவிக்கின்றேன்.

பகைவன் சினங்கொண்டானாயின் சிரித்த முகத்துடனிருத்தல், மிகுந்து கோபித்துக் கொண்டால் நல்வார்த்தைகளால் சமாதானம் செய்தல், திட்டினால் க்ஷேமம் விசாரித்தல், அடித்தால் பாபந் தொலைந்ததாகக் கருதி ஆனந்தித்தல் முதலியவைகளாம்.

கடைசியில் "இந்திரியவசத்தனை இந்தஜீவனுக்கு நிவர்த்திக்கவொண்ணாத இந்தப் பெரிய ஆபத்து தெய்வாதீனத்தால் வந்து விட்டதே" என்கிற தயையாகிய சந்தோஷத்தால் இளகிய மனமுடைய புருஷனுக்கு முன்னால் குரோதன் எப்படியுண்டாவான்?

அ:—நன்று! நன்று!!

க்ஷமை:—குரோதன் ஜயிக்கப்படின், ஹிம்சை, பாருஷியம் (கடுஞ்சொற்பகால்,) கர்வம், மாற்சரியம் (நீண்டகாலம் வரையில்

மனதில் பகைமை பாராட்டல்) முதலியவர்களும் ஜபிக்கப் பட்டவர்களை யாவார்கள்.

அ:—அப்படியாயின் நீ ஜயம்பெற்று வரக்கடவது!

க்ஷமை:—அரசனது ஆக்ஞைப் படியே.

போகிறாள்.

அ:—வேதவதி! லோபனை ஜபித்துவரச் சந்தோஷனை அழைத்துவா!

வாயி:—மகாராஜாவின் ஆக்ஞைப்படியே.

போகிறாள்.

சந்தோஷனுடன் வருகிறாள்.

சந்தோ:—(ஆலோசித்துத் தயையுடன்)

வனங்கள் தோறும் மரங்களில் கனிகள் நமதிச்சைப் படி சிறிதும் கஷ்டமின்றிக் கிடைக் கின்றன. ஒவ்வொரு இடத்திலும் புண்ணிய நதியின் குளிர்ந்த மாதுரியமான தீர்த்தம் கிடைக்கின்றது. பரிசிப்பதற்கு மிக மெதுவானதும் அழகான கொடிகளின் துளிர்களால் செய்யப்பட்டதுமான படுக்கையும் நமதிஷ்டப்படி எங்கும் கிடைக் கின்றது. அப்படியிருந்தும் கிருபண ஜனங்கள் பணத்திற் கொண்ட ஆசையால் பணக்காரர் வாசலி லிருந்துகொண்டு கஷ்டத்தைச் சகிக்கிறார்கள்.

(ஆகாயத்தை நோக்கி) அடே! மூடா! உன்னுடைய தெரியாத்தனம் அழிக்க முடியாதது.

ஏ மிருகத்திற்குச் சமானமானவனே! அற்பமான பணமென்னும் மிருகதிருஷ்ணிகையின் நீரைப் பருகவேண்டி எத்தனைமுறை நீ செய்த முயற்சிகள் பங்கமடைந் திருக்கின்றன. ஏ மூடா! அப்படியிருந்தும் உன்னுடைய ஆசை யொழியவில்லையே! உன் மனதும் சுக்குச் சுக்காய்ப் பிளவுபடவில்லையே! அது வச்சிரத்தாலும் கற்களாலும் அமைந்துள்ளது போலும்!

பேராசையால் அறிவிழந்த உனது நடத்தை எனமனதில் ஒரு விநோதத்தை யுண்டாக்குகிறது. ஏனெனில்-இது கிடைக்கவேண்டிய பணம் கிடைத்தது. இந்தப் பணம் அதிகமாய்க்

கிடைக்க வேண்டியது. அதை மூலமாகக்கொண்டு அதனால் பெறத்தக்க பணம் இது. இப்போதுகிடைத்தபணம் வேறு" என்று இப்படி எப்போதும் கிடைக்கவேண்டியபணத்தைப் பற்றி சிந்தித்துக் கொண்டிருக்கிறாய். இப்படிப்பேராசையென்கிற இருளால் சூழப்பட்ட உன்னை ஆசையென்கிற பிசாசு அதிசீக்கிரத்தில் சிறிதும் மிகுத்து வைக்க விடாமல் சாப்பிடப் போகிற தென்பதை நீ யறியவில்லை.

மேலும்:—

பணம் எவ்வளவோ பாடுபட்டுத் தேடப் படுகிறது. அதற்குச்செலவும், அழிவும், கட்டாயம் ஏற்படுகின்றன. ஆகையால் உனக்கு அப்பொழுது பணத்தை விட்டுப் பிரியநேரிடுகிறது. இதைக் காட்டிலும் அந்தப் பணத்தைச் சம்பாதிக்காமலிருப்பதே மேலல்லவா? அல்லது சம்பாதித்த பொருள் அழிந்து போவது நல்லதா? சொல். கிடைத்த பணத்திற்கு அழிவுண்டானால் மிகுந்த வருத்தந்தான் உண்டாகும். பணமே கிடைக்கவில்லையாயின் அத்துணை வருத்த மிராது.

இன்னமுங்கேள்;—

நமன் (மரணம்) எப்பொழுதும் சிரமீது இருந்து கூத்தாடுகிறான். கிழத்தனமென்னும், கோரமான பாம்பானது உன்னை விழுங்குகிறது. புத்திராதிகளான கழுகுகளால் உலகம் உண்ணப்படுகிறது. ஆகையால்பேராசையால் உண்டானதும் அஞ்ஞானத்தோடு கலந்தது மான புழுதியை ஞானமென்கிறநீரால்கழுவிச் சந்தோஷமென்கிற அமிர்த சாகரத்திற்குள் சிறிதேனும் மூழ்கினவனே சுகமாக ஜீவிக்கின்றான்.

வாயி:— இதோ அரசனிருக்கிறார். மகாத்மாவாகிய தாங்கள் அருகே செல்லலாம்.

சந்தோ:— (அருகேசென்று) மகாராஜனுக்கு ஜயமுண்டாவதாக! இதோ சந்தோஷன் நமஸ்கரிக் கின்றேன்.

அ:— இப்படி உட்கார்.

தனக் கெதிரே உட்கார வைக்கிறான்.

சந்தோ:— (வணக் கத்துடன் உட்கார்ந்து) மகாராஜா ஆக்ஞாபிக்கலாம்.

அ:—உன்னுடைய வல்லமையை யாமறிவோம்? ஆகையால் இந்த விஷயமாகத் தாமதிக்க வேண்டாம். லோபியைப் போர்முனையில் வெல்வதன் பொருட்டு நீ காசிக்குச் சொல்ல வேண்டும்.

சந்தோ:—மகாராஜ, உத்தரவுப் படியே!

அப்படிப் பட்ட நான் அநேக முகங்களுள்ளவனும் (ஆசைக்கு மார்க்கங்கள் அநேகம்) மூவுலகங் களையும் வென்றவனும் தேவர்கள் பிராமணர்கள் இவர்களைக் கட்டுவித்தல் கொல்லுதல் இவைகளிற் பெயர்போனவனு மாகிய லோபனை இராமபிரான் இராவணனைக்கொன்றதுபோல், பலாத் காரமாக இழுத்து அவனை வென்று வசப் படுத்திப் பின் அமேத கணத்தில் பிசைந்து பிழிந்து விடுகின்றேன்.

போய்விட்டான்

வணக்கமுள்ள வேடம் பூண்ட
புருஷனொருவன் வருகின்றான்.

புருஷன்:—சுவாமி! ஜயத்தைக் கருதிப் புறப்படுவதற் கேற்ற மங்களகாரியங்கள் தயாராகி விட்டன. ஜோதிடர்கள் குறிப்பிட்ட யாத்திரா காலமும் நெருங்கி விட்டது.

அ:—அப்படியாயின் சைன்னியங்கள் புறப்படவெண்டியதன் பொருட்டு சேனாபதிகளுக்குக் கட்டளை யிடவேண்டும்.

புரு:— உத்தரவுப்படியே.

போய் விட்டான்.

திரைக்குள்

ஓ! ஓ!! சைந்நியங்களே ! கன்னத் திலிருந்து பெருகும் மத மென்னும் மதுவை யுண்டுகொழுத்த வண்டுகளை யுடைய உத்தமமான யானைகளைத் தயார் செய்யுங்கள். அதி பலமான காற்றின் வேகத்தையும் விடமிகுதியான வேகமுடைய குதிரைகளை இரதங்களில் பூட்டுங்கள். குந்த மென்னும்(இருப்புலக்கை) ஆயுதங்களைக் கையிற் கொண்ட பதாதிகள், திக்குகளின் மத்தியில் நீலோத்பல வனங்களை யுண்டுபண்ணுகிறவர்களுக் கொப்பாகச் சஞ்சரிக்க வேண்டியது. பிரகாசிக்கும் படியான கத்திகளைக் கையிலேந்திய குதிரை வீரர்கள் சஞ்சரிக்கவேண்டும்.

(சந்தோஷ மடைந்து) அடே! இந்த ஈசுவரனைத் தான், க்ஷேத்திர மகிமை யறிந்த வியாசபகவான் முதலியவர்கள் இந்த க்ஷேத்திரத்திற்கு ஆத்மாவென்று சொல்லி யிருக்கிறார்கள். புண்ணிய சிலர்கள் இந்த க்ஷேத்திரத்தில் தேகத்தை யொழித்து அவரை யடைந்து விடுகிறார்கள்.

ஸாரதி:—பாருங்கள்! இதோ! காமன், குரோதன், லோபன் முதலானவர்களெல்லாம் நம்மைக் கண்டமாத்திரத்தில் இவிடத்தினின்று ஓடுகிறார்கள்.

அ:—ஆம்! இருக்கட்டும்; நமது விருப்பம் சித்திபெறும் பொருட்டு பகவானை வணங்குவோம்.

இரதத்திலிருந்து உள்ளே
புகுந்து பார்க்கிறார்கள்.

ஏ பகவானே! ஜய! ஜய!!

தேவக் கூட்டங்களின் கிரீடங்களிலுள்ள இரத்தின வரிசைகளின் காந்தியால் நீராஜனம் செய்யப் பட்ட கமலம் போன்ற பாதங்களுள்ள வரும், மினுமினுப் பூச்சியை யொத்த நக காந்திகளால் பலவர்ணங்களைக் காட்டும் பீடத்தை யுடையவரும், துவைதம் என்கிற நீடித்த பிரமத்தால் தவித்துக் கொண்டிருப்பவர்கள் தன்னை வணங்குவார்க ளாயின் அவர்களுடைய ஸம்ஸாரமாகிற நித்திரையை நீக்குவதில் சமர்த்தரும், புவியை (கடலி லிருந்து) எடுக்குங் காலத்தில் தெற்றிப் பற்களின் நுனிகளில் உராய்ந்து கொண்டு பிரகாசிக்கும் மலைக் கூட்டங்களை யுடையவரும் அடியிட்டு அளக்குங் காலத்தில் உலகெங்கும ஆக்ரமித்து நின்றவரும், காரணமின்றித் தேவேந்திரனால் அனுப்பப் பட்ட மேகங்கள் வருஷித்த பெரும் மழையை, மிகுந்த பலமுள்ள தமது கையால் கோவர்த்தன மென்னும் மலையை உயரத்தூக்கிக் குடையாகப் பிடித்துத் தடுத்து பயமடைந்த கோகுலத்தைப் பரிபாலித்து உலகம் அதிசயிக்கச் செய்தவரும், தேவர்களுக்குப் பகைவர்களுடைய மனைவிகளின் நெற்றியிலிருக்கும் குங்குமம் என்னும் சந்தியாகால தேஜஸைப் போக்குவதில் ஆதித்த

னுக்குநேராக விளங்குகிறவரும், பயங்கர அசுரனுடைய (இரண்ய கசிபு) மார்பைப் பிளப்பதில், வலுவுள்ளவைகளும் அதிக காந்தியுள்ளவைகளுமான நகவரிசைகளுள்ள இரண்டு கைகளிலிருந்தும் பெருகின பெரிய இரத்தக் கடலில் மூவுலகங்களையும் முழுகச் செய்தவரும், மூவுலகங்களுக்கும் பகைவனான கைடவனுடைய கண்டத்தி லுள்ள எலும்பாகிய மலைச் சிகரத்தில் நன்றாய்ப் பதிந்த சக்ராயுதமிருந்துபிரகாசிக்கும் அழகியகைகளையுடையவரும், அர்த்த சந்திர தாரியான பரம சிவனுக்கு இஷ்டமானவரும், (மலையாகிய) மத்தைக் கொண்டுவலுவுள்ள கரங்களால் கடையப் பட்ட கடலிலிருந்துண்டான இலக்ஷ்மியின் கொடிபோன்ற கரங்களால் ஆலிங்கனஞ் செய்யப்பட்டு, (அவளுடைய) கொங்கைகளிலுள்ள குங்குமரேகைகளின் அடையாளங்க ளமைந்த மார்புள்ளவரும், பெருத்த முத்துகளைக் கொண்டு செய்யப் பட்ட அழகிய ஆரங்களிருந்து பிரகாசிக்கும் கழுத்துள்ள வருமான பிரபுவே! ஏ வைகுண்ட வாசா! தன்னை வணங்கியவர்களின், ஸம்ஸார மோகத்தை யொழிக்கத் தக்க போத மென்னும் ஞானோற்பத்தியைத் தாங்கள் கொடுக்கவேண்டும். நமஸ்கரிக்கின்றேன். (வெளிவந்ததாய் அபிநயித்துப் பார்த்து) இந்த இடமேநமக்கு உசிதமான வாசஸ்தலம். ஆகையால் இவ்விடத்திலேயே சேனாநிவேசத்தை ஏற்படுத்துவோம்.

இருவரும் போய் விட்டார்கள்,

## நான்காவதங்கம்.

முற்றிற்று.

## ஐந்தாவதங்கம்.

சிரத்தை வருகிருள்.

**சிரத்தை.**—(ஆலோசித்து) இவ்வழி எங்கும் பிரசித்தியானது தான். எப்படியெனில், பெருத்த காற்றினால் மோதப்படும் மரங்கள் ஒன்றோடொன்று உராய்ந்து கொள்வதாலுண்டாகும் நெருப்பானது காடு முழுவதையும் அழித்துவிடுவது போல், ஞாதிகள் ஒருவர்க்கொருவர் பாராட்டும்பகைமையால் உண்டாகும் கோபாக்கினியானது குலமுழுவதையும் அழித்து விடுகின்றது.

(கண்ணீருடன்) சகோதரர்களின் நாசத்தால் உண்டாகும் கடுமையான துக்கமென்கிற தீயானது எவ்விதத்திலும் அடக்குதற்கரிது. விவேகமென்கிற அநேக மேகங்கள் கூடியும் அணைக்க முடியாதது.

அதாவது:—

கடல், பூமி, மலைகள், ஆறுகள். இவைகளுக்கும் நாசமுண்டாவது நிச்சயம். மடிந்தழியும் புற்களையொத்த அற்ப பிராணிகளுக்கு அழிவுண்டாவதைக் குறித்துப் பேசுவதற் கென்னவிருக்கின்றது? இவ்வளவு தெரிந்தும் உறவினர்களின் மரணத்தால் உண்டாகும் ஓர் வித சோகம் என்கிற நெருப்பானது மிகுதியுமேற்பட்டு விவேகத்தைத் தொலைத்து மனதைக் கொளுத்துகிறது.

ஆதலாற்றான், நமது குலத்திற்குக் காரணமாகிய காமன் குரோதன் முதலான சகோதரர்கள் மரணமடைந்ததாலேற்பட்ட சோகம் என்கிற தீயானது மர்மஸ்தானங்களையறுத்துச் சரீரத்தை வற்றவடிப்பது போலவும் அந்தராத்மாவைக் கொளுத்துகிறது போலவுமிருக்கின்றது.

(ஆலோசித்து) விஷ்ணுபக்தி தேவி எனக்குக் கட்டளையிட்டிருக்கின்றனள். (எங்ஙனமெனில்) "குழந்தாய் சிரத்தே! கஷ்டங்கள் மிகுதியாயுமுள்ள யுத்தத்தைப் பார்க்க எனக்கு

விருப்பமில்லை. ஆகையால் காசியை விட்டு சாலிக்கிராமம் என்கிற பெயர்கொண்ட பகவத் க்ஷேத்திரத்திற்குச் சென்று கொஞ்சக்காலம் போக்குகிறேன். நீ நடந்த சமாசாரத்தை நடிந்தபடி என்னிடம் அறிவிக்க வேண்டும்'' என்பதே. ஆகையால்தேவியின் அருகேசென்றுஇந்தயுத்த சமாசாரத்தை அறிவிக்கின்றேன். (நடந்து) இது தான் சக்ரதீர்த்தம். இவ்விடத்தில் ஸம்ஸார சாகரத்தைக் கடக்கச் சாதகமான கப்பலைச் செலுத்தும் மாலுமியாகிய மகாவிஷ்ணுவானவர் வசித்து வருகின்றார். (நமஸ்கரித்து) மகா முனிவர்களாலும் வணங்கப்படுகிற அதிமகிமையுள்ள விஷ்ணுபக்தி தேவியும் இங்கு சாந்தியுடன் ஏதோ சம்பாஷித்துக் கொண்டிருக்கிறாள். அருகே செல்கிறேன்.

[போகிறாள்.

விஷ்ணுபக்தியும் சாந்தியும்
பிரவேசிக்கிறார்கள்.

சாந்தி:—அம்மா! தங்களைப் பார்த்தால் ஆழ்ந்த சிந்தனைபோல் மனக் கலக்கமடைந்தவர் போல் காண்கின்றதே.

விஷ்:—குழந்தாய்! அநேக உத்தம வீரர்களுக்கு அழிவுண்டாக்கும் இந்தப் போரில் மகா பலமுள்ள மகா மோகனால் எதிர்க்கப் பட்ட குழந்தை விவேகன் யாதாயினனோ தெரியவில்லை! அதனால் என் மனம் மிகவும் நொந்திருக்கின்றது.

சாந்தி:—இதிலென்ன யோசனை யிருக்கிறது? தங்களுடைய அனுக்கிரகம் பரி பூர்ணமா யிருக்கின்றமையால் நிச்சயமாய் நமது விவேக ராஜனுக்கு ஜயமுண்டாகுமென்றே நான் கருதுகின்றேன்.

விஷ்:—குழந்தாய்! க்ஷேம முண்டாகுமென (அநுமான) பிரமாணத்தால் நிச்சயமாய் நாமறிந்தாலும் மனமானது நண்பர்கள் விஷயத்தில் எங்கு தீங்கு நேரிடுமோ என்பதைப் பற்றிச் சந்தேகித்துக் கொண்டிருக்கு மல்லவா?

தவிர, சிரத்தை வெகு காலமாய் வாராதது பற்றி மனதில் மிகுந்த சந்தேக முண்டாகிறது.

சிரத்தை:—(அருகே வந்து) பகவதி! நமஸ்கரிக்கின்றேன்.

விஷ்:—சிரத்தே! நின் வரவு நல்வரவாகுக!

சிரத்தை:—எல்லாம் தேவியின் அனுக்கிரகத்தினாலேயே.

சாந்தி:—அம்மா நமஸ்கரிக்கின்றேன்.

சிரத்தை:—பெண்ணே! என்னைக் கட்டிக்கொள்.

சாந்தி கட்டிக் கொள்கிறாள்

சிரத்தை:—குழந்தாய்! விஷ்ணுபக்தி தேவியின் அனுக்கிரகத்தால் முனிபுங்கவர்களின் மன மென்னும் ஸ்தானத்தை நீ யடைவாய்.

விஷ்:—அங்கு நடந்த தென்ன?

சிரத்தை:—தங்களுக்கு விரோதத்தைக் கருதுபவர்களுக்கு எது நடத்தப்படவேண்டுமோ அது நடந்தது.

விஷ்:—அதை விவரமாகத் தெரிவி.

சிரத்தை:—அம்மா! கேட்கவேண்டும். தாங்கள் ஆதிகேசவருடைய கோயிலிலிருந்து வெளியேறியவுடன் அதாவது சூரியனிடமிருந்த சென்னிறம் சிறிது மாறியதும் (கொஞ்சம் வெயிலேறியதும்) ஜய பேரி முழக்கத்தால் அழைக்கப்பட்ட உத்தம வீரர்களிடம் கர்ஜனையால் திக்குகளைச் செவிடுபடச் செய்வதும், ஒன்றை யொன்று நெருங்கியோடும் இரதங்களிலுள்ள குதிரைகளின் குளம்புகளால் பெயர்க்கப்பட்டு பூமியிலிருந்து கிளம்பும் பரந்த தூளியால்சூரியனைமறைக்கக் கூடியதும். மிகுந்த பலமுள்ள யானைகளின் பனைமட்டையை நிகர்த்த செவிகளின் சலனத்தால் உதிர்ந்த, மத்தகச் சிந்தூரத்தால் திசைகள் பத்தையும் செவக்கச் செய்வதும், பிரளய காலத்தி லுண்டாகும் மேக சப்தம் போல் பயங்கரமாகச் சப்திக்கக் கூடியதுமான அவர்களுடைய சேனைகளும் நமது சேனைகளுமாகிய கடலிரண்டும் தயாராயிருக்கையில் நமது மகாராஜன் மகா மோக ராஜனுக்கு நியாய சாஸ்திரத்தைத் தூதனாக அனுப்பினார். அத்தூதன் மகா மோகனிடம் சென்று, பின் வருமாறு கூறினான்.

அதாவது:—

விஷ்ணுவாலயங்களையும் நதி தீரங்களையும் புண்ணிய வனங்களையும் புண்ணிய வான்களுடைய மனதையும் விட்டுநீ உன் உடன் பிறந்தவர்களுடைன் மிலேச்ச (வேதக் கொள்கைக்கு மாறான கொள்கையுள்ளவர்கள்) தேசங்களுக்குச் செல்ல வேண்டும். இல்லாவிட்டால், நமது கத்தியால் வெட்டுண்ட உனது தேகத்திலிருந்து தாரையாகப் பெருகும் இரத்தத்தினால் பிரகாசிக்கும் திறந்த முகங்களில் பேம்! என்னுஞ் சத்தமிட்டுக் கொண்டு நரிகள் கூத்தாடும்.

விஷ்:—அப்புறம்! அப்புறம்!!

சிரத்தை:—பயங்கரமான நெற்றியில் கூத்தாடும் (துடித்துக் கொண்டிருக்கும்) புருவங்களையுடைய மகாமோகன் கோபங் கொண்டு "இந்த விவேகப் பயல் இந்த அனியாயத்தின் பலனை அனுபவிக் கட்டும்" என்று கூறிப் பாஷண்ட தர்க்க சாஸ்திரங்களுடன் பாஷண்ட சாஸ்திரங்களை யுத்தத்திற்கு முதலில் தயார் செய்தான்.

இதற்குள் நமது சேனை முகத்தில் கமலமலரைக் கையிற் கொண்டுசந்திரனுக் கொப்பான காந்தியையுடைய ஸரஸ்வதி தேவி, வேதங்கள், உபவேதங்கள், வேதாங்கங்கள், புராணங்கள் இதிகாசங்கள், தர்ம சாஸ்திரங்கள் இவைகளுடன் மிகுந்த பிரகாசத்துடன் அதிசீக்கிரத்தில் தோன்றினள்.

விஷ்:—அப்புறம், அப்புறம்.

சிரத்தை:—பிறகு, வைஷ்ணவம், சைவம், ஸௌரம், முதலானவர்கள் (ஸரஸ்வதி) தேவியினருகே வந்தார்கள்.

விஷ்:—அப்புறம், அப்புறம்.

சிரத்தை:—அதன் பிறகு ஸாங்கிய சாஸ்திரம், நியாய சாஸ்திரம், வைசேஷிக சாஸ்திரம் மகா பாஷியம் முதலான சாஸ்திரங்கள்சூழ, சகலரு மொப்பப் பிரகாசி யானின் றநியாயங்களென்கிற ஆயிரங் கைகளுடன் திக்குகளை விளங்கச் செய்து கொண்டு தர்மமாகிய சந்திரன் போன்ற வதனமுள்ளவளும்

மூன்று வேதங்களையும் மூன்று கண்களாக உடையவளுமான மீமாம்ஸையானவள் இரண்டாவது தர்க்காதேவி போல் ஆத்திரத்துடன் சரஸ்வதி தேவி முன் வந்து நின்றாள்.

சாந்தி.—அம்மா! இயற்கையாகவே ஒன்றுக் கொன்று விரோத முள்ளவைகளான ஆகமங்களுக்கும் தர்க்கங்களுக்கும் எப்படி யொற்றுமை யுண்டாயிற்று?

சிரத்தை:—பெண்ணே! ஒருவர்க் கொருவர் விரோதங் கொண்டிருப்பினும் பகைவர்கள் வந்து ஆக்கிரமிக்கும் போது யாவரும் ஒன்று செருவது தான் சுகமளிக்கக் கூடியது.

அதாவது:—

அதனால், வேதத்திலிருந் துண்டான சாஸ்திரங்களுக்குள் அவாந்தர விரோதமிருப்பினும் அந்தவேதத்தைக் காப்பாற்றுவதன் பொருட்டும் நாஸ்திகர்களை நாசஞ் செய்ய வேண்டியதன் பொருட்டும் ஒற்றுமை தான் உண்டாகும். ஆகமங்களின் தத்துவத்தை யாராய்ந்து பார்ப்பவர்களுக்கு விரோத மேற்படாது.

சாந்தமாயும் அழிவற்றதாயும் இரண்டாவதில்லாததாயும் பிறப்பற்றதாயும் விளங்கும் ஓர் தேஜஸ் (பிர்ம்மம்) தானே பிரமாவென்றும் விஷ்ணு வென்றும் சிவனென்றும் பலவகையாகச் சொல்லப் படுகிறது. வேதத்தை மூலமாக வுடையவைகளாகவும்பல வேறு வழிகளிற் சென்றவைகளாகவும் இருக்கிற சாஸ்திரங்கள் யாவும் ஜலப் பிரவாகங்கள் சமுத்திரத்தையடைவதுபோல் பிர்ம்மத்தையே சார்கின்றன.

விஷ்—அப்புறம்! அப்புறம்!!

சிரத்தை:—ஏ தேவி! ஓயாமல் வந்து விழுந்து கொண்டிருக்கும் பாணங்களால், ஓயாமல் மழை பொழியும் வருஷ கால நாட்களைப்போல் யானைகள்குதிரைகள்,காலாட்கள் இவர்களுக்குள் மிகக் கடுமையான போர் நடந்தது.

அதாவது:—

அந்த யுத்த களத்தில், மிகுதியும் பெருகிய இரத்தத்தையே நீராகவும், நெருக்கமா யிருக்கும் இறைச்சியையே சேறாகவும், பாணங்களால் அறுபட்டுச் சிதைந்து கிடக்கும்

யனைகளாகிய மலைகளில் தேக்குண்டு சிதறும் பிரவாகத்தின் துளிகளேயே அன்ன பக்ஷிகளாகவும் கொண்ட ஆறுகள் காக்கைகளும் கழுகுகளும் சூழ ஓடின.

இங்ஙனம் மிகக் கடுமையாக நடந்த போரில் பாஷண்ட சாஸ்திரங்கள் தங்களுக்குள் ஏற்பட்ட விரோதத்தால் யுத்த முனையில் சார்வாக மதத்தை நிறுத்தின. அந்தச் சார்வாக மதம் சேனைகள் ஒன்றோடொன்று நெருங்குவதால் நாசத்தை யடைந்தது. மற்ற பாஷண்ட சாஸ்திரங்களும் மூலமில்லாமையால் நல்ல ஆகமங்களாகிற கடலின் பிரவாகத்தால் நாசம் செய்யப்பட்டன. சுகதமதஸ்தர்களோ வெனில், மிலேச்ச ஜனங்களே மிகுதியாகவுடைய சிந்து தேசம், காந்தாரதேசம், பாரசீகதேசம், மகததேசம், ஆந்திர தேசம், ஹூணதேசம், வங்கதேசம், கலிங்கதேசம் முதலான தேசங்களுக்குப் போய் விட்டார்கள். பாஷண்டர்களாகிய திகம்பரன், காபாலிகன் முதலியவர்களோ வெனில், மூட ஜனங்கள் மிகுந்துள்ள பாஞ்சாலதேசம், மாளவதேசம், ஆபீரதேசம் இந்த பூமிகளில் கடலோரத்தில் மறைந்து கொண்டு திரிகிறார்கள். நியாயம் முதலானவைகளால் பின் தொடரப்பட்ட மீமாம்ஸையால்மிகுதியும் அடியுண்டு சிதறிப் போன நாஸ்திக தர்க்கங்களெல்லாம் அவைகளின் சாஸ்திரங்களுக்குப் பின்புறமே போய் விட்டன.

**விஷ்:**—பிறகு, பிறகு.

**சிரத்தை:**—வஸ்து விசாரத்தால் காமன் கொல்லப் பட்டான். க்ஷமையால் குரோதம்,பாருஷ்யம்(கடுஞ் சொல்,)ஹிம்ஸை முதலானவர்கள் நாச மடைந்தார்கள். சந்தோஷனைவன், லோபம், திருஷ்ணை, தைன்னியம், பொய், கோட்சொல்லல், திருட்டு துஷ்ட சகவாசம் முதலானவர்களைப் பிடித்துக் கொன்றான். அநசூயை (அசூயை யில்லாமை) யால் மாற்சரியம் ஜயிக்கப் பட்டது. பரோத் கர்ஷ சம்பாவனையால் (பிறர் உயர்ந்தவர்கள் என்னும் எண்ணத்தால் மதம் அழிக்கப்பட்டது. பரகுணாதிக்யத்தால் (பிறருடைய குணமே அதிகம்என்கிற எண்ணத்தினால்) மானம் (கர்வம்) நாசம் செய்யப் பட்டது.

விஷ்:—(மனமகிழ்ந்து) நன்றாய் முடிந்தது. மகாமோகனுடைய சங்கதி யென்ன?

சிரத்தை:—தேவி! மகா மோகனும் யோக விக்கினங்களுடன் எங்கேயோ மறைந்து திரிகிறான். இருக்குமிடம், தெரியவில்லை.

விஷ்:—அப்படியாயின் பலமான அனர்த்தன் இன்னும் பாக்கியாக விருக்கிறான். இவனைக் கொன்று விட வேண்டிய தவசியம். ஏனெனில், அழியாத ஐசுவரியத்தை யடைய விரும்புகிற புருஷன் தீ கடன் இவைகளில் எஞ்சியவைகளையும் பகைவர்களில் எஞ்சியவர்களையும் வைக்கலாகாது. (ஒழித்து விட வேண்டும்) இருக்கட்டும்; மனத்தைப்பற்றிய விசேஷமென்ன?

சிரத்தை:—அவனும் புத்திர பௌத்திரர்களுக்கு ஏற்பட்ட நாசத்தினால் மிகத் துக்கத்திற்குள்ளாகி ஜீவனையிழக்கத் தயாராய் விட்டான்.

விஷ்:—(சிறிது நகைத்து) அப்படியிருந்தால்நாமெல்லாம் கிருதார்த்தர்களாய் விடுவோமே. புருஷனும் சர்வோத்தமமான சுகத்தைப் பெறக் கூடுமே. அந்தத் துட்டன் உயிரை விடுவானேது?

சிரத்தை:—தாங்கள் பிரபோத மடைய வேண்டு மென்கிற சங்கற்பத்திலிருக்கும் போது அவன் சீக்கிரத்தில் சரீரத்துடன் இல்லாமலே போய் விடுவான்.

விஷ்:—அதிருக்கட்டும்; இவனுக்கு வைராக்கியம் உண்டாவதன் பொருட்டு வியாச பகவான் அருளிச் செய்த ஸரஸ்வதி (பிர்ம்ம சூத்திரங்கள்) யையனுப்புவோம்.

இருவரும் போய்விட்டார்கள்,

மனம் சங்கற்பம் இருவரும் பிரவேசிக்கிறார்கள்.

மன:—(கண்ணீருடன்) மக்கள்களே! எங்கு சென்றீர்கள்? எனக்குப் பிரியமான பார்வையைக் கொடுங்கள். இராகம், துவேஷம், மதம், மாற்சரியம் முதலிய என்னருமை மக்கள்களே! என்னைத் தழுவிக் கொள்ளுங்கள். எனது அங்கங்கள் பதைக்கின்றன, அந்தோ! வியோகிகளும் கதியில்லாதவர்களுமான என்னைக் கவனிப்பாரைக் காணோமே! அசூயை முதலான பெண்கள் எங்கே சென்றீர்கள்? ஆசை, திருஷ்ணை, ஹிம்ஸை முத

லான மருமகள்கள் எங்கு சென்றார்கள்? தெரியவில்லையே ஐயோ! அவர்களுங்கூட அதிஷ்டவீனனான என்னுடைய துஷ்ட தெய்வத்தால் ஏக காலத்தில் எங்கேனும் கொண்டு போகப் பட்டார்கள் போலும்! (தழதழத்த குரலுடன்) இந்த சோகம் என்கிற ஜ்வரமானது விஷாக்கினிபோல் பரவுகின்றது. சகல மர்மஸ்தானங்களையும் பிளக்கின்றது. சகிக்கொணாதவேதனையை யுண்டாக்குகிறது. விவேகத்தை அழிக்கின்றது. இருதயத்தில் மோகத்தை விருத்தி பண்ணுகின்றது. உயிரை பலாத்காரமாகச் சாப்பிடுகிறது. அந்தோகஷ்டம்!

மூர்ச்சை யடைகிறான்.

சங்:—(கண்ணீருடன்) அரசன் ஆறுதலடைய வேண்டும்.

மன:—(ஆறுதலடைந்து) நமது பிரவர்த்தி தேவியும், இவ்வாறிருந்தும் என்னை ஏன் தேற்றுகிறாளில்லை.

சங்:—சுவாமி! இன்னமும் பிரவர்த்தி எங்கிருக்கின்றாள்? குடும்பமுழுதும் நசித்து விட்டதென்பதைச் செவியுற்றதும் உண்டான துக்கமென்கிற அக்கினியினால் மார்பு வெடித்து இறந்தொழிந்தனள்.

மன:—ஆ பிரியே! எங்கிருக்கின்றாய்? எனக்கு விருப்பமான இனிய மொழியைப்பேசு! ஏ தேவி! என்னை விட்டுச்சொப்பனத்திலும் கூட நீ சுகப்படுவதில்லையே. நானும் தூக்கத்தில் நீபிரிந்திருக்கின் சவம் போலல்லவா ஆய்விடுவேன்! அப்படி யிருப்பினும் தெய்வத்தின் துஷ்ட விளையாட்டால் நீ பிரிக்கப் பட்டிருக்கிறாய். ஆயினும் மனமானது உயிருடனிருக்கின்றமையால் பிராணன்கள் அழிவற்றவைகளென்று தெரிந்து கொள்.

மறுபடி மூர்ச்சை யடைகிறான்.

சங்:—ராஜாவே! ஆறுதலடைய வேண்டும்.

மன:—(ஆறுதலடைந்து) இதற்குப் பிறகும் நாம் உயிரோடிருக்க வேண்டுமா? ஏ சங்கற்ப! சிதையடுக்கு; அக்கினியிற் பிரவேசித்துத் துக்காக்கினியை அணைத்துக் கொள்கிறேன்.

வியாசரால் சொல்லப்பட்ட ஸரஸ்வதி
(பிர்மசூத்திரம்) பிரவேசிக்கிறாள்.

ஸரஸ்:—விஷ்ணுபக்தி யென்னை யனுப்பி யிருக்கிறாள். "தோழி ஸரஸ்வதி! புத்திர சோகத்தினால் நொந்திருக்கிற மனதிற்கு

ஞானமுண்டாவதன்நிமித்தம் செல். அவனுக்குஎப்படிவைராக்கியம் உண்டாகுமோ அப்படி முயற்சிசெய்''எனக்கட்டளையிட்டிருக் கின்றனள். சரி யிருக்கட்டும்; அவனெதிரில் செல்கின்றேன் (அருகேசென்று)குழந்தாய்! இப்படியேன்னைதன்னியநிலைமையிலிருக்கின்றாய். உலகத்துப் பொருள்கள் யாவும்சதமல்லவென்பது உனக்குத் தெரிந்தது தானே. இதிகாசக்கதைகளை நீ படித்து மிருக்கின்றாய். என்னவெனில், அநேக கற்பகால ஆயுளையுடைய பிரமன், இந்திரன், தேவர்கள், அசுரர்கள்,மனு முதலானவர்கள், முனிவர்கள், பூமி, கடல்கள், இவர்கள்கூட கோடிக்கணக்காய் உண்டாய் நாசமடைந் திருக்கின்றனர். அங்ஙனமிருக்கக் கடல்நுரைக்கு ஒப்பானதும் பஞ்ச பூதங்களின் விகாரமாயுமுள்ள இச்சரீரம் அழிவை அடைந்தவுடன் துக்கத்தையுண்டாக்கக் கூடிய பெரிய மோகமானது ஜனங்களுக்கு ஏனுண்டாகின்றது?எப்படியுண்டாகின்றது?(தெரியவில்லையே)

"ஆகையால் வஸ்துக்கள் அழியத்தக்கவைகளென்று நினை. இது நித்தியம், இது அநித்திய மென்று அறிகிற புருஷன் துக்கத்தை யறியமாட்டான். ஏனென்றால்;—

பிரம்மம் ஒன்றே எப்போது முள்ளது. ஸத்யமானது. மற்றவையெல்லாம்கற்பனைசெய்யப்பட்டவைகள்.எனஜகத்தின் [பிரம்மத்தின்] ஏகத்துவத்தைப் பார்ப்பவனுக்கு [ஜீவன்முக்தனுக்கு] சோகமேது? மோகமேது?

மன:—பகவதி! மிகுந்த துக்கத்தால் கெடுக்கப் பட்ட மனதில் விவேக முண்டாவதற்கே இடமில்லை.

ஸரஸ்:—குழந்தாய்! சிநேகத்தின் குற்றமிது. சிநேகமே எல்லா அனர்த்தங்களையும் உண்டு பண்ணுகிற தென்பது யெல்லோரு மறிந்ததுதான். எப்படியெனில், மனிதர்கள், விஷக்கொடியின் வித்துகள் போன்ற குரூரமான பிரியமென்னும் பேருள்ள துக்கங்களை விதைக்கிறார்கள். அவைகளிலிருந்து வச்சிர நெருப்பை [இடி] உள்ளே கொண்டிருக்கும் சிநேகமென்னும் ரூபமுள்ள முளைகள் உண்டாகின்றன. அவைகளி...க்கும் ஜ்வாலைகளாகிற ஆயிரம்சிகரங்களுள்ள

இந்தச் சோகமென்னும் மரங்கள் நெருப்பானது, உயிரைக் கொளுத்துவதுபோல் தேகத்தைகொளுத்திக்கொண்டு வளருகின்றன.

மன:— தேவி ! ஆம் அப்படியானால் சோகாக்கினியால் கொளுத்தப்பட்ட எனக்குப் பிராணனைத் தரிக்கச்சக்தி இல்லை. எனது முடிவானகாலத்தில் தங்களைத் தரிசனம் செய்தது மிகவும் நல்லதாயிற்று.

ஸரஸ்:— தனக்குத்தானே கொலைபுரிந்து கொள்வது மிகவும் பெரிய அகாரியம். மேலும் அபகாரிகளான இவர்கள் விஷயத்தில் உனக்கேன் இவ்வளவு ஆத்திரம்? பார் ! புருஷர்களுக்கு மனைவி, புத்திரன் முதலானவர்கள் எப்போதாவது எங்கேனும் உபகாரத்தைச் செய்யப் போகிறார்களா? அல்லது செய்திருக்கிறார்களா? அல்லது செய்கிறார்களா? [இல்லை] இவர்கள் உனக்குரியவர்களுமல்லர்; ஆயினும் பிரிவினை யுண்டாம்போது அவர்களுக்காகப் பிராணிகள் நிஷ்பிரயோஜனமான மர்மச்சேதத்தை [அசாத்தியமான கஷ்டத்தை] யடையவேண்டியவர்களாகிறார்கள். அவ்வளவு தெரிந்திருந்தும் அதிகமான கஷ்டத்தை யனுபவித்துக் கொண்டு அல்லற்படுகின்றார்கள். இன்னமும் (கேள்)

பூர்ண பிரவாகமுள்ள எத்தனையோ ஆறுகளைத் தாண்டியிருக்கிறாய், எத்தனையோ மலைகடந்து சென்றிருக்கிறாய், விலங்கினங்களுலாவும் எத்தனையோ காடுகளிற் புகுந்திருக்கிறாய்! அந்தோ! கஷ்டம் ! இந்தப் பாபிகளின் பொருட்டு எந்தக் கஷ்டமான பாபத்தைத் தான் நீ செய்யவில்லை. பணக்கொழுப்பென்னும் களங்கத்தால் விகாரமுள்ள முகங்களுள்ள துஷ்டப் பிரபுக்களை நீ பார்த்திருக்கிறாய்.

மனம்:— ஆம்; அம்மா! அப்படித்தான். இருந்தாலும், தனக்குப் பிறந்தவர்களும் செவ்வனே வளர்க்கப் பட்டவர்களும் எப்போதும் மனதை விட்டகலாதவர்களுமான குழந்தைகள் நாசமடைய நேரிடின் அப்போதுண்டாகும் துக்கம் பிராணனைப் பிடுங்கி யெடுப்பது போல் மர்மஸ்தானங்களை யறுத்து மிகவும் கஷ்டத்தை யுண்டு பண்ணுகின்றது.

வை:—குழந்தாய்! இத்தகைய மயக்கங்கள் யாவும் மமதை (என்னுடையது என்னும் கொள்கை) யின் நீடித்த சம்பந்தத்தால் ஏற்பட்டதாகும்.

பாருங்கள்! வீட்டில் வளர்க்கப்படும் கோழியைப் பூனை புசித்துவிடின் புருஷனுக்கு எவ்வளவு துக்க முண்டாகிறதோ அவ்வளவு துக்கம் அந்தப்பூனை, தனது என்றுபாவிக்கப்படாத ஓர்சிட்டுக் குருவியை யேனும் எலியை யேனும் தின்றுவிடின் உண்டாகின்றதா?

ஆகையால்சகலஅனர்த்தங்களுக்கும் காரணமான மமதையை யொழிக்கமுதலில் முயற்சி செய்யவேண்டியதவசியம்.

பார்! மனிதனுடைய சரீரத்திலிருந்து எத்தனை புழுக்கள் உற்பத்தியாகின்றன. அவைகளை முயற்சியுடன் சரீரத்திலிருந்து விலக்குகிறார்கள். அப்படிப் பட்ட சிலவற்றைப் பிள்ளையெனக் கொண்டு தன் தேகத்தை வீணாக வருந்தச் செய்வது அறியாமையே யன்றி வேறில்லை யல்லவா?

மனம்:—அம்மா! சரிதான்! ஆயினும் மமதை யென்கிற கட்டு பிரிக்க முடியாததாயிருக்கிறது. (ஆலோசித்து ஆறுதலடைந்து) எவ்விதத்திலும் நான் தங்களால் காப்பாற்றப்பட்டேன்.

[தரையில்விழுந்துநமஸ்கரிக்கிறான்,

வை:—குழந்தாய்! உன் மனம் இப்போது உபதேசம் பெறத் தகுதியாய் விட்டது. ஆகையால் வேறொருசங்கதி சொல்லுகிறேன்.

தன் தந்தை, புத்திரன், அல்லது நண்பன் இவர்கள் இறந்து விடின் அறிவிலிகள் துக்கங் கொண்டு மார் பிலடித்துக் கொண்டு மிகவும் தவிக்கிறார்கள். அறிவுடையோருக்கோவெனில், அப்படிப் பிரிய நேரிடுவதால், சாரமில்லாததும் முடிவில் வெறுப்பைக் கொடுக்கக் கூடியதுமான ஸம்ஸாரத்தில் ஓர் அடக்கமும் வைராக்கியமும் உண்டாகிறது.

வைராக்கியன் பிரவேசிக்கிறான்.

வைராக்கியன்.—(ஆலோசித்து) பிரமன் இந்தச் சரீரத்தை, நீலோத்பல மலரின் இதழின் நுட்பமான நீண்ட தோலை மேலே கொண்ட மாம்சத்தால் படைத்திலனாயின், அடுத்தடுத்துக்கசிந்

தொழுகிக்கொண்டிருக்கும்இரத்தத்துடன் மாமிச கவளத்தை உண்பதில் அவாவுற்றுச் சரீரத்தில் விழும் கழுகு, காக்கை ஓநாய் இவைகளை எவன் எப்படி யோட்டுவான்?

தவிர சம்பத்துக்கள் ஊஞ்சல் போல் ஸ்திரமற்றவைகள், ஸப்தஸ்பரிசாதிகளால் உண்டாகும் சுகங்களெல்லாம் முடிவில் வெறுப்பைக் கொடுக்கக் கூடியவைகள். இந்தத் தேகம் ஆபத்துகளுக் கிருப்பிடம். அதிகமான தனம் மரணபரியந்தம் கஷ்டத்தைக் கொடுக்கக் கூடியது. ஜனங்களோ அதிக துக்க முள்ளவர்கள். மாதர்கள் அதிகமாக ஆபத்தை விளைவிக்கக் கூடியவர்கள், இப்படியெல்லாமிருந்தும் மகா கோரமான (சம்சார) வழியில் ஆசை கொள்கிறார்களேயன்றி, ஆத்மாவை அடைகிறார்களில்லை.

ஸரஸ்:—குழந்தாய்! வைராக்கியன் இதோ உன்னிடத்திற்கு வருகின்றான். ஆகையால் அன்போடு வர வேற்றுக்கொள்.

மன:—குழந்தாய்! நீ எங்கிருக்கின்றாய்?

வை:—(அருகே சென்று) இதோ அடியேன் வந்தனம் செய்கின்றேன்.

[வந்தனம் செய்கின்றான்.

மனப்:—குழந்தாய்! பிறந்த வுடனே நீ என்னை விட்டு விட்டாயே? தழுவிக் கொள்.

[தழுவிக்கொள்ளுகிறான்,

குழந்தாய் உன்னைப் பார்த்தவுடன் என் துக்காவேசம் ஓய்ந்தது.

வை:—பிதாவே! இவ்விஷயத்தில் என்ன துக்கமிருக்கின்றது? ஏனெனில் வழியில் வழிப்போக்கர்களும் ஆற்றில் மரங்களும் ஆகாயத்தில் மேகங்களும் சமுத்திரத்தில் கப்பல் வியாபாரிகளும் பல வேறு இடங்களிலிருந்து வந்தபோதிலும் சிறிது தூரம் ஒன்று சேர்ந்து பின் பிரிந்து வெவ்வேறிடங்களுக்குச் செல்வதுபோல் தாய், தந்தை, புத்திரன், சகோதரன், உறவினர் இவர்களுடன் எப்பொழுது கூட நேரிட்டதோ அப்பொழுது பிரிவினையு முண்டென்பது நிச்சயம். அப்படியிருக்கத் துக்கமேது?

மனம்:—(ஆனந்தத்துடன்) குழந்தை கூறுவது சரியே! அங்ஙன மிருப்பினும் தாங்கள் சிறிது கவனிக்கவேண்டும். இடைவிடாத பழக்கத்தால் உறுதி யடைந்ததும் நட்பு என்னும் நூலால் பிணைக்கப் பட்டதுமான மமதையென்கிற பாசத்திலிருந்து எதனால் பிராணிகளுக்கு விமோசன முண்டாம்? அதற்கு ஏதேனும் உபாயம் தங்களுக்குத் தெரியுமா?

ஸரஸ்:—குழந்தாய்! உலகத்திலுள்ள வஸ்துக்கள் யாவும் அநித்தியமென்று பாவிப்பதே மமதையை நாசஞ்செய்ய முதலாவது உபாயம்.

அதாவது—

அநாதியாயும், விஸ்தாரமாயுமுள்ள இச்சம்சாரத்தில், தகப்பன்மார், மனைவிகள், புத்திரர்கள், பிதாவுடன் கூடப் பிறந்தவர்கள், பாட்டன்மார்கள் இவர்கள் கோடிக் கணக்காய் நாசமடைந்து விட்டார்களல்லவா? ஆகையால், தன்னுறவினர்களின் உறவை மின்னற்கொடி தோன்றி மறைவதுபோல்கண நேரமுள்ளதாகவே நினைத்துச் சுகமாயிருக்கவேண்டும்.

மனம்:—பகவதி! தமது அனுக்கிரகத்தால் எனதறியாத்தனம் முற்றும் ஒழிந்து போய் விட்டது.

ஆயினும் உமது முகமாகிறசந்திரனிடமிருந்துண்டான நிர்மலமான உபதேச மென்கிற அமுதங்களால் எனது இருதயம் பரிசுத்தப் பட்டிருந்த போதிலும் துக்கங்களால் (மறுபடியும்) அழுக்கடைகிறது. ஆகையால், அம்மா! கசிந்துகொண்டேயிருக்கும் துக்க மென்கிற இந்தக் காயத்திற்குத் தாங்களே ஓர் மருந்து தெரிவிக்க வேண்டும்.

ஸரஸ்:—குழந்தாய்! உண்மையில் இதன் விஷயமாய் முனிவர்கள் உபதேசித்திருக்கிறார்கள்.

அகாலத்தி லேற்பட்டவைகளும் திடரென்று மர்மஸ்தானங்களைப் பிளக்கின்றவைகளுமான பெரிய துக்க மென்கிற காயங்களுக்கு நினையாமையே உத்தமமான மருந்தாகும்.

மனம்:—இது சரிதான்; ஆனால் சித்தத்தை மட்டும் அடக்க முடியவில்லை. இந்தச்சித்தத்தைஎவ்வளவு முறைதடுத்தாலும் அடிக்

கடி நீண்ட கவலைக் குள்ளாகின்றது. எப்படியெனில் சந்திர பிம்பமானது காற்றினால் அலைக்கப்படும் மேகத்துண்டுகளால் அடிக்கடி மறைக்கப்படுவது போலாம்.

ஸரஸ்:—குழந்தாய்! கேட்கவேண்டும். இது சித்தத்தின் விகாரம். ஆகையால் ஏதேனும் சாந்தமான விஷயத்தில் சித்தத்தைச் செலுத்த வேண்டும்.

மனம்:—அம்மா! தயைபுரியவேண்டும்; சாந்தமானவிஷயம் யாது?

ஸர:—குழந்தாய்! இது பரம இரகசியம்; ஆயினும் கஷ்டப்படுகிறவர்களுக்கு உபதேசித்தல் குற்றமாகாது. நீருண்ட மேகம் போல் நீலவர்ணமுள்ளவரும் பெருத்த முத்தாரம் தோள் வளைகள், குண்டலங்கள், கிரீடம் இவைகளை யணிந்துள்ளவருமான ஸ்ரீ மகா விஷ்ணுவை எப்போதும் சிந்தனை செய்து (பிறகு) துக்க சம்பந்த மற்ற பிரமத்தினிடம் வெயிற்காலத்தில் குளிர்ந்த மடுவில் பிரவேசிப்பது போல், பிரவேசித்து மனதிற்கு இதமான சாந்தியை யடைவாய்.

மனம்:—சரி, இப்போது,

யௌவனமுள்ள ஸ்திரீகள், வண்டுகள் மொய்த்துக் கொண்டிருக்கக் கூடிய மரங்கள், அன்றலர்ந்த மல்லிகை மலரின் வாசனையிற் படிந்த இளங்காற்றுகள் இவைகளனைத்தையும் மிருகதிருஷ்ணிகை யென்னும் சமுத்திர ஜலத்திற் கொப்பாகவே அறிகின்றது மனம்.

ஸரஸ்:—குழந்தாய்! இது உண்மைதான். ஆயினும் கிருகஸ்தன் ஓர் கணமும் ஆச்சிரம தர்மமின்றியிருத்தல் கூடாது. ஆகையால் இது முதல் நிவர்த்தியே உனக்குத் தர்மபத்தினி.

மனம்:—(வெட்கத்துடன்) தேவியின் உத்தரவுப் படியே.

ஸரஸ்:—சமம், தமம், ஸந்தோஷம் முதலான புத்திரர்களும் உன்னை அநுசரிக்க வேண்டும். யமம் நியமம் முதலானவர்கள் உனக்கு மந்திரிகள். விவேகனும் உமது அனுக்கிரகத்தால் உபநிஷத்தேவியுடன் கூட இளவரசனாக இருக்கட்டும். மைத்திரீ முதலான இந்த நான்கு சகோதரிகளையும் விஷ்ணு

பக்தியானவள் உனக்குத் தெளிவுண்டாக்குவதற்காக அனு ப்பி யிருக்கிறாள். அவர்களை மரியாதையாய் ஒப்புக் கொள்.

மனம்:—தேவியின் கட்டளைப் படியே! எல்லா ஆக்ஞை களையும் சிரசில் வகித்தேன்.

மனமகிழ்ந்து வணங்குகிறான்.

ஸரஸ்:—ஸாம்ராஜ்யத்தை யடையக் கடவாய்! யமம் நியமம் முத லான இவர்களைக் கவனித்துப் பார்த்துக் கொள்ளவேண்டும். இவர்களுடன் கூடவே தீர்க்காயுளுள்ள விவேகன் இளவர சுப்பட்டதை யடைந்திருக்கவேண்டும். நீ இவ்வாறு ஸ்திர மான தன்மையை அடைந்தால் க்ஷேத்திரக்ஞனும் தன் ஸ்வபாவத்தை யடைந்து விடுவார்! ஏனென்றால் கேள்:—

ஆத்மா ஆதியந்த மில்லாதவராயினும் உன்னுடைய சம்ப ந்தத்தால் சினைகங்களென்கிற மேகங்களால் மறைக்கப் பட்டு தான் தனியே யிருந்தாலும் புத்தி வியாபாரங்களில் அநேகமா கச் சூரியன் கடலின் அலைகளில் காண்பது போல் தெளிவான ஸ்வரூபமுள்ளவராகக் காணப்படுகிறார். நீ எப்படியாவது கஷ்டப்பட்டு விஸ்தாரமான அந்த விர்த்திகளை வெளிவிடாம லடக்கிக்கொண்டு சும்மா இருந்தாயானால் தெளிந்தகண்ணாடி யில் சூரியன் பிரகாசிப்பது போல் தனது ஸ்வரூபமான ஆன ந்தத்தினால் நிறைந்த வராய் விடுவார்.

சரி யிருக்கட்டும் (இறந்து போன) பந்துக்களுக்கு தர்ப் பணம் செய்ய ஆற்றுக்குப் போவோம்.

மன:—தேவியின் உத்தரவுப் படியே.

[எல்லாரும் போய் விட்டார்கள்.

ஐந்தாவதங்கம்.

முற்றிற்று



## ஆருவதங்கம்.

சாந்தி பிரவேசிக்கிருள்.

—ooo—

*சாந்தி:*—"குழந்தாய் ! மக்கள்கள் மடிந்த பிறகு மோகமொழிந்து வைராக்கிய மடைந்த மனமானது சாந்தியைப் பெறுகிறது. அப்பொழுது ஐந்து விதமான (1) கிலேசங்களும் ஒழிந்து விடு கின்றன. ஆகையால் இப்போது புருஷன் தத்துவஞான மடைய விருப்பங் கொள்கிருர். நீ வெகு சீக்கிரமாய்ச் சென்று உபநிஷத்தேவிக்கு நல்வார்த்தை சொல்லி என்னருகேயழைத் துக் கொண்டுவா" என எனக்கு விவேகமகாராஜன் ஆக்ஞா பித்திருக்கிருர். (பார்த்து) என் தாயார் சந்தோஷத்துடன் என்னவோ ஆலோசனை செய்துகொண்டு இங்கேயே வருகின் ருளே.

சிரத்தை வருகிருள்.

*சிரத்தை:*—இப்போது நமது இராஜகிரகம் சுகமுற்றிருப்பதைக் காணும் என் கண்களிரண்டும் அமிர்தத்தால் நிரப்பப்பட் டன போலிருக்கின்றன.

*அதாவது:*—

இந்த இடத்தில் துஷ்டர்கள் சிக்ஷிக்கப் படுகிருர்கள். யமம் முதலிய சாதுக்கள் ஆராதிக்கப் படுகிருர்கள். தவிர தேவானு ஜீவிகள் (ஜீவாத்மாக்கள்) தங்களுக்குட்பட்ட சமா திகளால் ஈசுவரனை ஆராதிக்கிருர்கள்.

*சாந்தி:*— (அருகே வந்து) அம்மா ! என்ன யோசித்துக்கொண்டே போகிருய்?

சிரத்தை முன் சொன்னதையே சொல்கிருள்,

---

(1) அவித்தியா 2 அஸ்மிதா 3 ராகம் 4 துவேஷம் 5. அபிநிவேசம் ஆகக் கிலேசங்கள் ஐந்து இவைகளின் விரிவைப்பிரகரணகிரந்தங்களிற் காண்க.

**சாந்தி:**—ஆனால் தலைவனாகிய புருஷனுடைய செய்கை மனதையடக்குவதில் எப்படியிருக்கிறது?

**சிரத்தை:**—பிடித்துக் கொல்லத்தக்கவன் விஷயத்தில் எப்படியோ அப்படி.

**சாந்தி:**—அப்படியானால் எஜமானனே ஸாம்ராஜ்யத்தை அலங்கரிக்கப் போகின்றனரோ ?

**சிரத்தை:**—ஆம்! ஆம்!! ஏனெனில், பரமாத்மாவை அனுஸந்தானம் (பிரபஞ்சத்தைப் பரமாத்ம சொரூபமாக நிச்சயித்தல்) செய்வதால் அவரே ஆத்மாராமராகவும்(ஸ்வாராட்) சிதாநந்த ரூபியாகவும் (ஸம்ராட்) ஆய்விடுவார்.

**சாந்தி:**—மாயையின் விஷயத்தில் சுவாமியின் அனுக்கிரகம் எப்படியிருக்கிறது ?

**சிரத்தை:**—ஆ ! நிக்கிரகம் எனக் கூறுவதை யொழித்து அனுக்கிரகம் எனக் கூறுகிறது எங்ஙனே பொருந்தும்? சுவாமி சகலவிதமான அனர்த்தங்களுக்கும் இவளே காரணமெனக் கருதி இவளை யொழிக்க நினைக்கின்றார்.

**சாந்தி:**—அங்ஙனமாயின் தற்காலம் இ ரா ஜ கிருகம் இருக்கும் நிலைமை யென்ன ?

**சிரத்தை:**—கேள்—

இது நித்தியம், இது அநித்தியம் என ஆராய்வதே ஸ்த்ரீ. வைராக்கியம் ஒன்றே நண்பன். யமம் நியமம் முதலானவர்களே நல்ல நண்பர்கள். சமம் தமம் இவர்களோ முக்கியமாய் சகாயஞ் செய்பவர்கள். மைத்திரீ முதலானவர்கள் பணிவிடைக்காரிகள். மோக்ஷேச்சை தா ன் எப்போதும் கூடவிருப்பவள். மோகம், மமதை, சங்கற்பம் சங்கம் முதலான பகைவர்களே நாசஞ்செய்யத் தக்கவர்கள்.

**சாந்தி:**—சுவாமிக்குத் தர்மத்தினிடம் அன்பு எப்படி யிருக்கிறது?

**சிரத்தை:**—பெண்ணே ! வைராக்கியன் அருகே வந்தது முதல் சுவாமியானவர், இவ்வுலகம் பரலோகம் இவைகளிலுள்ள போகங்களில் மிகவும் வெறுப்படைந்தவர் போற் காண்கிறார்.

ஆகையால் அவர்(ஜீவன்)பாபத்திற்குப்பலனாகிய நரகத்திற்குப் பயப்படுவது போல் புண்ணியத்தின் பலனுக்கும் பயப்படுகிறார். ஏனெனில் இரண்டும் அழிந்து போகக் கூடியதல்லவா? இதனால்காமசம்பந்தத்தை யொழித்துப்புண்ணியகர்மங்களைக் கூட மிகவும் கஷ்டப்பட்டு ஒப்புக்கொள்கிறார். ஆனால்,சுவாமி ஆத்ம நிஷ்டராயிருப்பதைப் பற்றிச் சிந்தித்து, தான் செய்ய வேண்டிய வைகளைச் செய்தாய் விட்டதாகக் கருதித் தர்மம் இப்போது சேட்டையற்றிருக்கிறது.

சாந்தி:—மகா மோகன் (யோக) விக்கினங்களோடு மறைந்திருக்கின்றானே அவனைப் பற்றி யென்ன ?

சிரத்தை:—பெண்ணே ! மகாமோகன் அப்படிக் கஷ்டதசையை யடைந்தாலும் ஸ்வாமியை மோசஞ் செய்யக் கருதி (2) மதுமதீ என்னும் வித்தையுடன் அந்த விக்கினங்களை யனுப்பினான். இவர்களிடத்தில் சுவாமி சிக்கிக் கொண்டால் விவேகன் உபநிஷத் என்று சிந்திக்கவே மாட்டாரென்பது அவன் கருத்து.

சாந்தி:—அப்புறம் ! அப்புறம் !

சிரத்தை:—பின் அவர்கள் சுவாமியினிடம் சென்று இந்திரஜால ஸ்சொரூபமான ஓர் வித்தையைக் காண்பித்தார்கள்.

அதாவது:—

புருஷன்(இந்த மதுமதீ வித்தையை யாசிரயித்தால்)நூறு யோசனை தூரத்திற் கப்பாலுண்டாகும் சப்தங்களைக் கேட்கிறான். வேதங்கள், புராணங்கள் பாரதம், கதைகள், தர்க்கம் முதலானவைகளில் ஞானம் தானாகவே உண்டாகின்றது. சுத்தமான பதங்களை யுபயோகித்து சாஸ்திரங்களையும் காவியங்களையும் தானே இயற்றுகிறான். சகல லோகங்களிலும் சஞ்சரிக்கிறான். இரத்தினமயமான மகாமேருமலையையும் காண்கிறான்.

---

(2) மதுமதீ—இந்த வித்தையைப்பற்றி பிருகதாரண்ய உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது அதாவது மனம், நேத்திரம், சுரோத்திரம், வாக்கு, கை, கால் இவைகளைப் பிரமமாகத் தியானித்தல்.

மேலும் மதுமதி வித்தையால் யெவ்விடம் சென்றாலும் அங்கங்கு அபிமான தேவதைகளால் மரியாதை செய்யப்படுகிறான்.

அதெப்படியெனில், "இவ்விடத்தில் உட்காரவேண்டும். இங்கு பிறப்பிறப்பிரண்டு மில்லை. எந்தவித ஏற்பாடுமில்லாமல் இந்த இடம் இயற்கையிலேயே நல்ல அழகுவாய்ந்தது. அநேகவிதமான (கடாக்ஷ வீக்ஷண்ணிய) விலாசங்களும் அழகுமமைந்த வித்தியாதர ஸ்திரீகள் தங்கள் கரங்களில் புண்ணியமயமான மங்கள திரவியங்களை ஏந்திக் கொண்டு அன்போடு இதோ தங்களைச் சேவிக்கின்றார்கள். ஆகையால் இங்குவாருங்கள். இவிடத்தில்தங்கமயமான மணல்களுள்ள ஆறுகளிருக்கின்றன. பெருத்த நிதம்பமுள்ளவர்களும் கமலம்போன்ற முகமுள்ளவர்களுமான உத்தமஸ்திரீகளையும் மரகதவிரத்தினம் போன்ற இலைகளையுடைய அழகிய வனவரிசைகளையும் இன்னும் உமது புண்ணிய பலனுக்கேற்ற எல்லாபோகங்களையும் அனுபவியுங்கள்.

சாந்தி:—அப்புறம்! அப்புறம்!

சிரத்தை:—பெண்ணே! அதைக் கேட்டதும் மாயை சிலாக்கியமென்று கூறினள். மனமானது சரியென்று கூறி ஒப்புக்கொண்டான். சங்கற்பத்திற்கு உற்சாகமுண்டாயிற்று. சுவாமியும் சம்மதித்தவர் போலானார்

சாந்தி:—(வருத்தத்துடன்) ஆ கஷ்டம்! கஷ்டம்!! மறுபடியும் அந்த ஸம்ஸாரவலையிற் சிக்கிக் கொண்டாரா சுவாமி!

சிரத்தை:—இல்லை! இல்லை!

சாந்தி:—பிறகு! பிறகு!

சிரத்தை:—பிறகு அருகேயிருந்த தர்க்கன், அவர்களனைவரையும் கோபத்தால் சிவந்த கண்களுடன் பார்த்துப் பின் சுவாமியை நோக்கி, சுவாமி! விஷயங்களென்னும் மாம்ச கவளத்தைப் புசிக்க ஆசையுள்ளவர்களான இந்தச் சபையிலுள்ளோரால், குரூரமான விஷயங்களென்கிற அதே தணலில் அப்படியே தள்ளப்படுகிற ஆத்மாவை நீரேன் அறியவில்லை. சுவாமி! கேட்கவேண்டும்.

சம்சாரமென்கிற சாகரத்தைக் கடக்கவேண்டியதன் நிமித்தம் சில காலத்திற்கு முன் யோகமென்னும் கப்பலைச் சம்பாதித்தீர். இப்போது அதை மதத்தினால் ஒழித்து விட்டு தீத்தணல் மயமான ஆற்றில் விழுகிறீரோ?" எனக் கேட்டான்.)

சாந்தி:—பிறகு, பிறகு,

சிரத்தை:—இவ்வார்த்தைகளைச் செவியுற்றதும் "விஷயங்களுக்கு க்ஷேமமுண்டாகுக" எனக் கூறி விட்டு மதுமதியை நிராகரித்து விட்டார். (சுவாமி)

சாந்தி:—நன்று! நன்று!! நீ எங்கே புறப்பட்டாய்?

சிரத்தை:—விவேகனைக் கேட்டு வரும்படி சுவாமி எனக்கு ஆக்ஞாபித்தார்.

சாந்தி:—அப்படியானால் நீ சீக்கிரம் செல்.

சிரத்தை:—அதனால்தான் ராஜ சமூகத்திற்குச் செல்லப் புறப்பட்டேன்.

சாந்தி:—உபநிஷத் தேவியை யழைத்து வரும்படி மகாராஜன் எனக்குக் கட்டளையிட்டிருக்கிறார். சரி யிருக்கட்டும், அவரவருடைய கடமையைச் செலுத்துவோம்.

இருவரும் போய்விட்டார்கள்.

புருஷன் வருகிறான்.

புருஷன்:—(யோசித்துச் சந்தோஷத்துடன்) விஷ்ணுபக்தி தேவியின் மகிமையே மகிமை. ஆச்சரியம்! ஏனெனில், அவளுடைய அனுக்கிரகத்தினால் சம்சாரமென்கிற சாகரத்தி லுண்டாகும் (பஞ்ச) கிலேசங்களென்னும் பெரிய அலைகளைக் கடந்து விட்டேன். மமதைகள் என்கிற பெரிய சுழல்களையும் தாண்டி விட்டேன். உறவினர்களென்கிற மகரங்கள், முதலைகள் இவைகளுக்கும் தப்பினேன். குரோதம் என்கிற வடவா முகாக்கினியை விலக்கிவிட்டேன். படர்ந்திருக்கும் திருஷ்ணை (ஆசை) என்கிற கொடிகளைப் பிரித்தெறிந்து விட்டேன். ஆகையால் இனி (மேற்கண்ட) சம்சார சாகரத்தை அநேகமாக நான் கடந்து விட்டதாகச் சொல்லலாம்.

உபனிஷத்தும் சாந்தியும் பிரவேசிக்கிறார்கள்.

உப:—சகி ! அப்படிச் சிறிதும் தயையில்லாத மகாராஜனது முகத்தை நானெப்படிக் காண்பேன்? ஏனெனில் அவர் என்னைப் பிறருடைய மனைவியைப்போல் வெகு காலம் தனியே விட்டிருந்தாரே !

சாந்தி:—அம்மா ! அப்படிப்பட்ட பெரிய ஆபத்தில் மூழ்கியிருந்தவரைக் கூட அம்மா நீ தூஷிக்கின்றாயே?

உப:—சகி ! எனது பெருங்கஷ்ட தசையை நீ கண்டவளன்று. அதனால் தான் நீ அப்படிக் கூறுகின்றாய்; சொல்கிறேன் கேள். கையிலுள்ள கங்கண வரிசைகள், அவைகளில் பதித்துள்ள இரத்தினங்கள் சிதைய உடைந்து போயின. மன்னுடைய சூடாமணியை அபகரிப்பதால்ஏற்படும் அவமானத்தால் தலைமயிர்கெடுக்கப்பட்டது. துரதிர்ஷ்டவசத்தாலும் பாபத்தாலும் விவேகமகாராஜன் என்னை விட்டுப் பிரிந்திருக்கையில் என்னை யாரார்போ தாசியாக்க விரும்பினார்கள்.

சாந்தி:—இது முழுமையும் மகாமோகனுடைய துஷ்டச் செய்கை. இவ்விஷயத்தில் மகாராஜாவின் மேல் குற்றமில்லை. அந்தமோகன் மனம் காமம் இவர்களைக் கொண்டு செய்வித்த உபதேசத்தினால் உன்னை விட்டு விவேகமகாராஜன் விலக்கப்பட்டார். அதுவுமன்றி ஆபத்தில் மூழ்கிப்போன பர்த்தாவினுடைய நற்காலத்தை எதிர்பார்ப்பதே குலஸ்திரீகளுக்கு இயற்கையான குணம். ஆகையால் இப்போது பிரியமான பார்வையாலும் இனிய மொழியாலும் மகாராஜாவைப் பெருமைப்படுத்து. இப்போது பகைவர்கள் தொலைந்தார்கள். உனது அபீஷ்டங்களும் பூர்ணமாய்விட்டன.

உப:—தோழி! நானிப்போது வருகையில் குழந்தைகீதை, என்னைப் பார்த்து இரகசியமாய் "பர்த்தாவும் ஸ்வாமியுமான புருஷனுடைய கேள்விகளுக்குத் தகுந்தபடி மரியாதையாக விடையளிக்க வேண்டும். அப்பொழுது தான் பிரபோதோற்பத்தி யுண்டாகும்" என்று கூறினள். நானெப்படிப் பெரியோர்களுக்கு முன் னின்று அவ்வளவு தைரியமாய்ப் பேசுவேன்?

சாந்தி:—தேவி! கீதையினுடைய இந்த வார்த்தையைப் பற்றி யோசிக்கவேண்டாம். இந்த சமாசாரத்தை விஷ்ணுபக்தியானவள் விவேக மகாராஜனுக்குச் சொல்லியிருக்கிறாள். வா! தரிசனம் செய்து பர்த்தாவையும் ஆதிபுருஷனையும் சந்தோஷப்படுத்துவோம்.

கருணை:—பிரிய சகி! அப்படியே செய்வோம்.

போகிறார்கள்

அரசனும் சிரத்தையும் பிரவேசிக்கிறார்கள்.

அரசன்:—குழந்தாய்! என் அன்புள்ள உபநிஷத்தைச் சாந்திகாண்பாளா?

சிரத்தை:—மகாராஜாவே! தெரிந்து கொள்ளவேண்டியதைத் தெரிந்து கொண்டேபோனவளான சாந்தி எப்படிப் பாராமலிருப்பாள்?

அ:—எப்படி?

சிரத்தை:—அரசனே! மந்தரமலையிலுள்ள விஷ்ணு கோயிலில் உபநிஷத் தேவி தர்க்க வித்தைகளுக்காகப் பயந்து கீதாதேவிக்குள் மறைந்திருக்கின்றனளென்று முந்தியே விஷ்ணுபக்தி தேவி சொல்லியிருக்கிறாள்.

அ:—தர்க்க வித்தைகளுக்காகப் பயப்படுவானேன்?

சிரத்தை:—மகாராஜா! இந்தச் சாமாசாரத்தை அவளே தெரிவிப்பாள். ஆகையால் வரவேண்டும். இதோ சுவாமியானவர் தங்களுடைய வரவை யெதிர் பார்த்துக் கொண்டு ஒருவருமில்லாத இடத்தில் தனியே யிருக்கின்றார்.

அரச:—(நெருங்கிவந்து) ஸ்வாமி நமஸ்கரிக்கின்றேன்.

புருஷ;—குழந்தாய்! இந்த சிஷ்டாசாரமானது நியாயத்திற்கு விரோதமாயிருக்கிறது. ஏனெனில் நீ ஞானத்தில் பெரியவனாகையால் நமக்கு உபதேசம் செய்து அதனால் பிதாவின் முறைமையை யடைந்திருக்கின்றாய். எப்படி யெனில், முன்னொரு சமயம், தேவர்கள் தர்ம மார்க்கத்தில் புத்தியையிழந்து அதைக்குறித்துத் தனயர்களைக் கேட்டார்கள். அவர்கள் தங்களுக்குத்தந்தைகளான தேவர்களைத் தங்களுக்குள்ள ஞானத்

தால் வசப்படுத்திக் கொண்டு (உபதேசாரம்பத்தில்) "உ பிள்ளைகளே! கேளுங்கள்" என்றார்கள். அதனால் நீங்கள் நம் மிடத்தில் பிரவாக இருக்கவேண்டியது தான் தர்மம்.

சாந்தி:—தேவி! இதோ மகாராஜா ஸ்வாமியுடன் ஏகாந்தத்தி லிருக்கிறார். ஆகையால் தாங்கள் அருகே செல்லவேண்டும்.

உபநிஷத் தேவி கிட்டவருகிறாள்

சாந்தி:—சுவாமி! இதோ உபநிஷத் தேவி தங்கள் பாதங்களில் நமஸ்கரிக்க வருகிறாள்.

புருஷ:—இல்லை இல்லை. நமக்குத் தத்துவஞானத்தை உண்டுபண் ணுவதால் இவள் தாயேயன்றி வேறில்லை. ஆகையால் இவளைத் தான் நாம் நமஸ்கரிக்கவேண்டும். அல்லது அனுக்ரகம் செய்யும்விஷயத்தில் உபநிஷத்தேவிக்கும் தாயாருக்கு மிகுந்த வித்தியாசமிருக்கிறது. ஏனென்றால், தாயார் கெட்டியாகக் கட்டுகிறாள் (சம்ஸாரத்தில் தள்ளுகிறாள்) இந்த தேவியோ வென்றால் பந்தத்தை விடுவிக்கிறாள்.

உபநிஷத் தேவி விவேகனைப் பார் த்து நமஸ்கரித்து தூரத்தில் உட் காருகிறாள்

புருஷ:—நீ இவ்வளவு நாட்களையும் எங்கிருந்து கழித்தாய். கூற வேண்டும்.

உப:—சுவாமி—

மடங்கள், சாவடிகள், பாழுங்கோயில்கள், இவைகளில் வீணே அதிக வார்த்தைகளைப் பேசிக்கொண்டிருக்கும் மூர்க் கர்களுடன் இந்த நாட்களைத் தள்ளினேன்.

புருஷ:—உன்னுடைய தத்துவத்தை அவர்களேதேனும் அறிந்தார் களா?

உப:—இல்லை. அவர்கள் தமிழ் தேசத்துப் பெண்களின் வார்த்தை களை மதித்ததுபோல் என் வார்த்தைகளைக் கொள்ளாமலும் எனக்குவாசஸ்தலம் இதென்பதையும் கருதாமல்தங்களிஷ்டப் படி விகற்பமாகப் பொருள்படுத்துகிறார்கள். ஆகையால் அவர் கள் என்னை யாறுப்வ தெல்லாம் பிறருடைய பொருளை ஈட்டுவதன் நிமித்தமே தவிர வேறில்லை.

புரு:—அப்புறம் ! அப்புறம் !

உப:—பிறகு ஒரு சமயம் கிருஷ்ணாஜினம், அக்னி, சமித், ஆஜ்யம், ஜுஹு, ஸ்ருவம் முதலான பாத்திரங்களுடனும் இஷ்டி, பசு அக்னிஷ்டோமம் முதலான யாகங்களுடனும், சகலமான கர்ம காண்டங்களும் வழிகாட்ட வந்து கொண்டிருக்கிற யக்ஞவித்தையை வழியிற் கண்டேன்.

புரு:—பிறகு, பிறகு.

உப:—அநேக புத்தகங்களைச் சுமக்கின்றமையால் ஒருக்கால் இவள் நமது தத்துவத்தை யறிவாள். இவளுக் கெதிரில் கொஞ்ச நாட்களைத் தள்ளலாமென நான் யோசித்தேன்.

புருஷ:—பிறகு,

உப:—பிறகு நானவளை யடைந்தேன். அவளும் உன் அபிப்பிராய மென்னவென்று என்னைக் கேட்டாள். நானும் "அம்மா! நானிப் போது நாதனில்லாதவளா யிருக்கின்றேன். உன்னிடம் சில காலம் வசிக்க எண்ணி யிருக்கிறேன்." என்று பதிற் கூறினேன்.

புரு:—பிறகு, பிறகு.

உப:—எந்தப் புருஷனிடமிருந்து இவ்வுலகம் உண்டாகின்றதோ, எவரிடத்தில் சந்தோஷத்துடன் பிரகாசிக் கின்றதோ, முடிவில் எவரிடத்தில் லயமடைகின்றதோ; எவரது பிரகாசத்தால் இந்த ஜகத் பிரகாசிக்கின்றதோ; எவரது தேஜஸானது சுவபாவமாயுள்ள ஆனந்தத்தால் பிரகாசிக்கின்றதோ, புண்ணிய சாலிகள், துவைதம் என்கிற அந்தகாரத்திலிருந்து நீங்கி, விகாரம், விகாசம், கிரியை முதலியவைகளற்ற எவரைமறுபிறப்பைக் கடக்க அடைகிறார்களோ அப்படிப் பட்ட புருஷனை நான் துதிக்கின்றேன் என்று கூறினேன். பிறகு அவள், "செயலற்றவர் எப்படி ஈசுவரனாக விருக்க முடியும்? சம்ஸாரத்தை யொழிப்பது கர்மமே யன்றி ஒரு பொருளின் அறிவல்ல; ஆகையால் புருஷன் சம்சாரத்தை நீக்கத் தக்க கர்மங்களைச் செய்துகொண்டு சாந்தமானமனதுடன் நூறு வருஷம் ஜீவித்திருக்க விரும்பவேண்டும்.

ஆகையால் உன்னை யடைவதால் எனக்கு யாதும் பயனில்லை. ஆயினும் கர்த்தாவும் போக்தாவுமான புருஷனைத்

து தித்துக் கொண்டு நம்மிடத்தில் நீ சில காலம் வசிப்பதில் குற்றமென்ன?" என்றாள்.

அ:—(பரிகாசத்துடன்) ஆச்சரியம்! புகையென்கிற இருளால் மலினமடைந்த கண்களுள்ள யக்ஞவித்தைக்குத் துர்ப்புத்தி யுண்டானது ஆச்சரியமா யிருக்கின்றது. அதனால் தான் இப்படிக் குதர்க்கத்தில் பிரவேசித்தாள்.

இயற்கையிலேயே அசையாத்தன்மையுள்ள இரும்பு காந்தத்தின் முன்னுலிருந்தால், அது ஒரு அசேதனப் பொருளாக விருந்தாலும் பலாத்காரமாக வேலை செய்கின்றது. அது போல் சர்வசாக்ஷியாக விளங்கும் பரமேசுவரனுடைய பார்வையால் ஏவப்பட்ட மாயையானது உலகங்களை உண்டாக்குகிறது; இதுதான் ஈசுவரன் என்பவருக்கு ஈசுவரத்வமுண்டென்பது.

ஆகையால் அக்ஞானத்தால் குருடர்களான ஆடவர்களுக்கு இத்தகையபுத்தி யுண்டாகும். அக்ஞானத்தால் உண்டாகும் சம்சாரத்தைக் கர்மங்களால் அழிக்க யத்தனிக்கும் யக்ஞவித்தை யானவள், பெரிய இருட்டை மற்றோரிருட்டால் போக்க வேண்டுமென விரும்புகின்றனள்.

இயற்கையிலேயே ஜடங்களும் அக்ஞான சொரூபிகளுமாயுள்ள இந்த ஏழுலோகங்களையும் பிரகாசிக்கச் செய்யும் பரமாத்மவை யறிந்து முத்தியைப் பெறவேண்டும். அன்றேல் சம்சாரத்தை விடுவதற்கு ஏதுவான மார்க்கம் வேறெதுவுமில்லை.

புருஷன்:—பிறகு,

உப:—பிறகு யக்ஞவித்தை சிறிது யோசித்து, "தோழி! நீ யருகே யிருந்தால் நமது மாணக்கர்கள், கெட்டவழக்க முடையவர்களாய் விடுவார்கள். ஆகையால் நீ விரும்பும் இடத்திற்குத் தயை செய்து செல்லவேண்டும்" என்று கூறினாள்.

புருஷன்:—பிறகு,

உப:—பின் நான் அவளை விட்டுப் பிரிந்தேன்.

புரு:—பிறகு,

உப:—பிற்கு கர்மகாண்டங்களோடு கூடிய மீமாம்ஸையை நான் கண்டேன். அவள் அக்னிஹோத்திரம் முதலிய கர்மங்களை

(நித்தியம், நைமித்திகம், காம்யம்) அதிகாரமுள்ளவைகளாகப் பிரித்துக்காட்டிக்கொண்டும், சுருதிமுதலிய (1) ஆறுபிரமாணங்கள் தன்னைப்பின்றொடர, (திருஷ்டபலம், அதிர்ஷ்டபலம், உபாயபலம் என்கிற பிரயாஜும், அனுயாயகாஜும், முதலிய) நானுவிதமான அங்கங்களைக் கொண்டு கர்மானுஷ்டானம் செய்வித்துக் கொண்டும் உபதேசங்கள் (வேண்டிய விஷயங்களைச் சப்தத்தினால் கூறுதல்) அதிதேசங்கள் (வேறோரிடத்திற் சொல்லப்பட்டவைகளை மற்றோரிடத்திற் சேர்த்துக் கொள்ளல்) இவைகளோடு கூடினவளாயிருந்தாள்.

புருஷ:—பிறகு,

உப:—பிறகு நான் அவளை அப்படியே வசிக்கஇடம்வேண்டுமெனப் பிரார்த்தித்தேன். பிறகு அவளும் "உன் செய்கை யென்ன" என்று என்னைக் கேட்டாள். நான் முன் கூறியதையே கூறினேன்.

புரு:—பிறகு,

உப:—அவள் அருகே யிருப்பவர்களுடைய முகத்தைப் பார்த்து, "பரலோகத்திற் கர்ம பலனை அனுபவிக்கும் புருஷனை இவள் சாதித்துக் கொடுப்பவளாதலால் இவளால் நமக்கு உபகாரமுண்டு. ஆகையால் இவளுக்கு ஓர் வேலை யேற்படுத்தி வைத்துக் கொள்ள வேணடும்" என்று மீமாம்ஸை கூறினள். அங்கிருந்த மாணுக்கர்களுள் ஒருவன் [பிரபாகரன்] சம்மதித்துவிட்டான். பெருங்கீர்த்தி வாய்ந்தவனும் மீமாம்ஸையின் மனத்திற்கு அதிதேவதையாகவு மிருந்த குமாரிலஸ்வாமி யென்கிற மற்றோர் மாணுக்கன் "அம்மா! கர்மங்களுக்கு யோக்கியமான புருஷனை இவள் நிரூபணம் செய்தாளில்லை. ஆனல் அகர்த்தாவும் அபோக்தாவுமான ஈசுவரனை நிரூபிக்கின்றாள். அப்படிப்பட்ட ஈசுவரன் கர்மங்களுக் குபயோகப்படார்" என்று கூறினன். பின்னர் மற்றொரு மாணுக்கன் (சாலிநாதன்) உலகங்களில் புகழ்படைத்த (ஜீவ) ஆத்மாவையன்றி ஈசுவரனென்று ஒருவனிருக்கிறனே?" என்று கேட்டான்.

(1) சுருதி, லிங்கம், பிரகரணம், ஸ்தானம், வாக்கியம், ஸமாக்யா ஆக ஆறும்.

பிறகு குமாரிலன்சிரித்து" இருக்கின்றார். ஒருவர் உலககாரியங்களைக் கவனிக்கின்றார். மற்றொருவர் மோகத்தில் மூழ்கிய புத்தியுள்ளவர். ஒருவர் கர்மங்களின் பலன்களை விரும்புகின்றார். மற்றொருவர் அவைகளைப் பிரார்த்திப்பவனுக்குக் கொடுக்கின்றார். ஒருவர் கர்மங்களில் ஏற்படுத்தப் பட்டிருக்கிறார். மற்றொருவர் ஜீவன்களை ஆளுகிறவர் போலிருக்கிறார். ஆகவே பற்றுதலில்லாத இப்படிப்பட்ட புருஷனைக் கிரியைகளுக்குக் கர்த்தாவாக நியமிப்பது எப்படி முடியும்" என்றான்.

அ:—(சந்தோஷத்துடன்) நன்று! குமாரில சுவாமி! நன்று!! நீர் நல்ல புத்திசாலியாயிருக்கின்றீர்.

எப்போதும் ஒன்று சேர்ந்திருப் பவைகளும், மூன்றுக் கொன்று விரோத மில்லாதவைகளுமான இரண்டு பறவைகள் (சுத்த ஞான முள்ள ஜீவப் பிரம்மங்களென்று தாத்பரியம்) ஒரே விருக்ஷத்தை(தேகம்) அடைந்தன. அவைகளில் ஒன்று (ஜீவன்) கர்ம பலத்தைப் புசிக்கின்றது. மற்றொன்று (பரமாத்மா)புசியாமலே பிரகாசிக்கின்றது.

புரு:—அப்புறம்! அப்புறம்!'

உப:—பின் நான் மீமாம்ஸையுடன் சொல்லிக் கொண்டு புறப்பட்டு விட்டேன்.

புரு:—பிறகு.

உப:—பிறகு அநேக மாணுக்கர்களுடன் கூடிய தர்க்க வித்தைகளைப் பார்த்தேன். அவர்களில் ஒருத்தி, (வைசேஷிக வித்தையை) உலகத்தில் விசேஷமாகக் கருதப்படும் (5வது) பதார்த்தத்தைக் கற்பனை செய்து கொண்டிருந்தாள். மற்றொருத்தி, (நியாய வித்தை) *(1) சலம், ஜாதி, நிக்ரகம் இவை

(1) சலம்—ஒரு பொருளை யுத்தேசித்துக் கூறப்பட்ட வார்த்தைக்கு மற்றொரு பொருளைக் கூறுதல்.

ஜாதி—கெட்ட பதிலுரைத்தல்

நிக்கிரகம்—பிறருடைய கர்வத்தையடிக்குதல்

ஜல்ப்பியம்—ஜயிக்க விரும்பியவன்கதை

விதண்டை—தன் மதத்திலுள்ள குற்றங்களைக் கவனியாது எதிரியினுடைய மதத்தைக் கண்டித்தல்,

மிருதியுமுடைய அனுமானவயவ வாக்கியங்களைக் கொண்டு வாதம், ஜல்ப்பியம், விதண்டை இவைகளைச்செய்து வந்தாள்.

மற்றொருத்தி, (சாங்கிய வித்தை) பிரகிருதிக்கும் புருஷனுக்கும் பிரிவினை காட்டிப் பேதத்தைச் சொல்லிக் கொண்டு மகத்தத்துவம், அகங்காரம் முதலான இருபத்தைந்து தத்துவங்களைக் கணக்கிடுவதில் கவலையுள்ளவளாக இருந்தாள்.

புரு:—அப்புறம் அப்புறம்.

உப:—அவர்களை முன் போலவே நான் ஆசிரயித்தேன். அவர்களும் என்னை முன்போற் கேட்க நானும் முன் போலவே என் காரியத்தைத் தெரிவித்தேன். பிறகு அவர்கள் வெளிப்படையாய் பரிகாசம் செய்து கொண்டு "அடீ வீண்பேச்சுக்காரி! பரமாணுக்களிலிருந்து உலகம் உண்டாகின்றது. ஈசுவரன் நிமித்தகாரணம் என, அவர்களுள் ஒருத்தி கோபத்துடன் அடி பாபி! ஈசுவரனையே விகாரியாகச் சொல்லி அழியும் தன்மையுள்ளவராக நிரூபணம் செய்கின்றாய், பிரதானத்திலிருந்தல்லவா ஜகத்துக்கு உற்பத்தி" என்றாள்.

அ:—ஆச்சரியம்! துர்ப்புத்திகளுள்ள தர்க்க வித்தைகளுக்கு இது கூடத் தெரியவில்லை. பிரமேயங்கள் முழுமையும் (புத்திக்குப் புலப்படக் கூடியவை) குடம் முதலானவை போல் காரியமாகையால், பரமாணுக்கள் பிரதானம் இவைகளுக்கு உபாதான காரணமாகச் சொல்வதும் கவனிக்கத்தக்க தன்று. ஜலத்தில் தோன்றும் சந்திரன், ஆகாயத்தில் தோன்றும் பட்டணம் சொப்பனம்(கனவு)இந்திரஜாலம் முதலானவை போல் பிரமேயம் முழுமையும் உற்பத்தி லயம் முதலானவைகளுடன் கூடியதும் அசத்தியமாயும் ஒருவரால் செய்யப்பட்டதாயு மிருக்கிறது. அப்படிப்பட்ட ஜகத்தானது கிளிஞ்சலில் வெள்ளி போலவும் புஷ்பமாலையில் பாம்பு போலவும் தன்னுடைய ஆத்துமபோத சொரூபியான ஸ்ரீஹரியை யறியாத காலத்தில் உண்டாகின்றது. தத்துவக்ஞானம் உண்டான உடன் நாசத்தை யடைந்து விடுகிறது.

விகார மென்னும் சங்கைபோ வெனில் பாமர ஸ்திரீக ளின் மனதிலுண்டாகிற விகற்பங்களென்கிற விளையாட்டுகள் போலுள்ளது.

விகார மற்றதாயும் ஜோதிஸ்வரூபமாயும் உற்பத்தி விநாசமற்ற நித்திய ப்ரகாச ரூபமாயும் அமிசங்கள் அற்றதும் நிர்மலமுமான வஸ்துவானது ஜகமுண்டாகிற விஷயத்தில் எப்படி விகாரத்தை யடையும்? அடிக்கடி நீலோத்பல புஷ்பத்தின் இதழ் போல் காந்தியுள்ள மேகங்களின் வரிசைகள் உண்டாவதால் ஆகாசத்துக்கு எப்படிப் பட்ட விகார

புரு:—நன்று! நன்று!! புத்திசாலியான விவேகனுடைய இந்த ஆராய்ச்சி என்னுடைய மனத்தை ஆனந்திக்கச் செய்கின்றது. அப்புறம் அப்புறம்.

உ.ப:—பிறகு அவர்களெல்லாரும் கோபத்துடன் "கஷ்டம், உலகத்தையே ஒழித்து மோக்ஷத்தைக் கூறுகிற இவள் நாஸ்திக மார்க்கத்தை யடைந்திருக்கிறாள். ஆகையால்இவளைத்தண்டிக்க வேண்டும்" என்று கூறி என்னைச் சிக்ஷிக்க எல்லோரும் விரைவாக ஓடிவந்தார்கள்.

புரு:—(பயத்துடன்) அப்புறம் அப்புறம்.

உ.ப:—பிறகு நான் மிகவும் வேகமாகப் புறப்பட்டு தண்டகாரண்ணியத்திற் புகுந்தேன். பிறகு மந்தரமலையில் அமைத்துள்ள மதுஸூதனருடைய கோயிலுக்குக் கொஞ்சம் சமீபத்தில் கைகளிலிருந்த கங்கணவரிசைகள், அவைகளிற் பதித்துள்ள இரத்தின வரிசைகள் சிதைய உடைந்து போயின. சூடாமணியை யபகரிப்பதாலேற்படும் அவமானத்தால் என்னுடைய தலை மயிர் கெடுக்கப்பட்டது. இவைமுதலான அவஸ்தை எனக் குண்டாயிற்று.

புரு:—அப்புறம் அப்புறம்

உ.ப:—பிறகு கோயிலுக் குள்ளிருந்து கதையென்னும் ஆயுதத்தை கையிற் கொண்டு வெளிவந்த புருஷர்கள் சினந்து அந்தத் தர்க்கவித்தைகளை அடித்தார்கள். அவர்கள் பயந்து திகந்தங் களுக்குப் போய்விட்டார்கள்.

அ:—(சந்தோஷத்துடன்) ஸர்வலோக ஸாக்ஷியாக விளங்கும் பகவான் உன்னை ஹிம்சிக்கிறவர்களுக் கிரங்கார்.

புரு:—அப்புறம் அப்புறம்.

உப:—முத்து மாலை அறுக்கப்பட்டது. என் சரீரத்திலிருந்து நழுவின வெண்பட்டானது அபகரிக்கப்பட்டது. பிறகு நான் மிகவும் அச்சமுற்றுப் பாதசாரங்கள் நழுவ கீதையின் ஆச்சிரமத்திற் புகுந்தேன்.

நானங்கு வந்ததைப் பார்த்துக் குழந்தை கீதை பரபரப்புடன் அம்மா! அம்மா! வென்று கூவி என்னைக் கட்டிக் கொண்டு உட்கார வைத்தாள். சங்கதி முழுமையும் அறிந்தவுடன் "அம்மா! இவ்விஷயத்தில் மனம் வருந்த வேண்டாம், எவர்கள் உன்னை ஒப்புக்கொள்ளாமல் அசுரத்தன்மையுடையவர் போல் இச்சைப்படி திரிகிறார்களோ அவர்களை ஈசுவரனே சிக்ஷிப்பார். அந்தப்படியே கீதையில் அவர்களைக் குறிப்பிட்டு "கொடிய பகைவர்களான புருஷாதமர்களை எப்பொழுதும் சம்சாரத்தில் அசுர யோனிகளிலேயே தள்ளுகிறேன்" எனப் பகவான் கூறியிருக்கின்றனர்" என்றாள்.

புரு:—(ஆசையுடன்) தேவி! அப்படிப்பட்ட ஈசுவர னென்பவர் யாரென்று உனது அனுக்கிரகத்தால் அறிய விரும்புகிறேன்.

உப:—(கோபங் கொண்டவள் போல்) தன்னையே யறியாத குருடனை யொத்த புருஷனுக்கு எவன் தான் மறுமொழி கூறுவான்.

புரு:—(சந்தோஷத்துடன்) ஆ! நான் என்று சொல்லக் கூடிய புருஷனென்கிற ஆத்மாவே பரமேசுவரனு?

உப:—ஆமாம் அப்படித்தான்.

அதாவது:—

ஆதியந்த மற்ற பரம புருஷன் உன்னைக் காட்டிலும் வேறல்ல. புருஷோத்தமன் என்கிற பரமாத்துமாவைக் காட்டிலும் நீ வேறல்ல. ஜல ரூப உபாதியால் சூரிய பிம்பம் இரண்டாகத் தெரிவது போல் அநாதியான மாயையால் நீ வேறுபட்டவன் போலிருக்கிறாய்.

புரு:—(விவேகனைக் குறித்து) பகாவனே! பூஜிக்கத் தக்கவளான உபநிஷத்தேவி தெரிவித்தும் பொருள் மனத்திற்கு நன்றாய்ப் புலப்படவில்லை. ஏனென்றால், (சரீரத்தில்) அவச்சின்னனுயும் பேதமடைந்தவனுயும், கிழத்தனம் மரணம் இவைகளை யடைந்தவனுயு மிருக்கிற எனக்கே இந்த தேவியானவள், சச்சிதாநந்த சுவரூபத்தை நிரூபணம் செய்கிறாள்.

விவேக:—பதங்களின் அர்த்தம் விளங்காவிட்டால் வாக்கியத்தின் அர்த்தம் விளங்காது. தாங்கள் கூறியது உண்மைதான்.

புரு:—அதை யறிய பூஜ்பாளான தாங்கள் ஒரு உபாயம் சொல்ல வேண்டும்.

விவேக:—இதோ சொல்லுகிறேன்.

அந்தக்கரணத்தோடு கூடிய நான் என்பதை இல்லை (நேதி நேதி) என்கிற சுருதி வாக்கியத்தால் அறிந்ததும் தத்துவங்கள் நாசமடைகின்றன. பிறகு ஜீவாத்ம பரமாத்ம சொரூபத்தை யறிகிறான். அதன் பின் "தத்வமஸி" என்கிற வாக்கியோபதேசம் பெற்று சம்சார இருளைவிட்டு நீங்கிச்சுயம் பிரகாசமாயும், உதாசீனராயும், தேஜோரூபியாயும் அநந்தமாயும் தன்னைத்தானே யறியுந் தன்மையால் உண்டாகும் ஆநந்தமயமாயும் பிரகாசிக்கிறான் ஜீவன்.

புரு:—(ஆனந்தத்துடன்) (கேட்ட விஷயத்தை ஆராய்ந்து பார்க்கிறான்.

நிதித்தியாஸனம் (தியானம்) வருகிறது.

நித்திய:—பூஜிக்கத் தக்கவளான விஷ்ணுபக்தி எனக்குக் கட்டளையிட்டிருக்கிறாள். "நீயும் புருஷனிடத்தில் வசிக்க வேண்டு" மென்கிற நம்முடைய அபிப்பிராயத்தை இரகசியமாக விவேனுக்குத் தெரிய உபநிஷத்துக்குச் சொல்லு,(பார்த்து) இதோ உபநிஷத் தேவி விவேகன் புருஷன் இவர்களுக்குக் கொஞ்ச சமீபத்தில் இருக்கின்றாள்.கிட்டப் போகிறேன்(கிட்டப்போய் உபநிஷத்தைப் பார்த்து ரமசியமாய்)" அம்மா! விஷ்ணுபக்தி தேவி! தேவர்கள் சங்கற்பத்திலிருந்தே உண்டாகிறார்கள்.

நீ இப்போது கர்ப்பிணியாயிருக்கிறா யென்று நான் தியானத்தாலறிந்தேன். உனது வயிற்றில் குரூர ஸ்வபாவமுள்ள வித்தை என்னும் பெண்ணும் பிரபோதோதயனும் இருக்கிறார்கள். அவர்களுள் வித்தையை ஸங்கர்ஷணா வித்தையால் (ஒரு வயிற்றிலுள்ள கர்ப்பத்தை மற்றொரு வயிற்றிற்குக் கொண்டுபோய்ச் சேர்க்கும் சாமர்த்தியம்) மனத்திடம் சேர்த்துப் பிறகு பிரபோத சந்திரனைப் புருஷனிடத்தில் வைத்துவிட்டுக் குழந்தையான விவேகனுடன் கூடஎனதுசமீபத்திற்கு வந்து சேரவேண்டும்" என்று உத்தரவிட்டிருக்கிறாள்.

உப:— தேவியின் கட்டளைப்படி நடக்கிறேன்.

புரு:—(தியானத்தை அபிநயிக்கிறான்.)

திரைக்குள்

ஆச்சரியம்! ஆச்சரியம்!! (வித்தை யென்னும்) பெண் மனதினுடைய மார்பைப் பிளந்துகொண்டு மிகுந்த காந்தியுள்ள மின்னற் கொடியைப்போல் திக்குகளெங்கும் பிரகாசம் வீச வெளியே வந்து மகாமோகனை அவனுடைய பரிவாரங்களுடன் தின்றுவிட்டு மறைந்துபோகிறாள். அழகான பிரபோதோதயமும் ஏகமான க்ஷேத்திரக்ஞனை யடைகிறான்.

பிரபோதோதயன் வருகிறான்.

பிரபோ:—என்ன கிடைத்திருந்தது? என்ன போய் விட்டது? என்ன உண்டாயிருந்தது? என்ன நசித்துப் போயிற்று? என்ன சேர்ந்திருந்தது? என்ன கலந்து போயிற்று? இது என்ன ஒன்றுமில்லை" என்கிற இப்படிப்பட்ட கற்பனைகளை சகஜமான பிரகாசத்தால் நாசமடையும் மூவுலகமும் யாருண்டானால் அடைவதில்லையோ அப்படிப்பட்ட பிரபோதோதயம் என்பவன் நான்தான். (கொஞ்சம் நடந்து) இதோ புருஷனிருக்கிறார். சமீபத்திற்குப் போகிறேன் (கிட்டப்போய்) ஸ்வாமி பிரபோதசந்திரோதயன் நமஸ்கரிக்கின்றேன்.

(விவேகனை யழைத்துக் கொண்டு போய்விட்டாள்) கிருத்தியாஸனம் புருஷனுள் புகுந்து விட்டது.

புருஷ—(பிரீதியுடன்) குழந்தாய்! வா என்னைக் கட்டிக்கொ.

(பிரபோதோதயன் அப்படியே தழுவிக்கொள்கிறான்.

புருஷ—(ஆனந்தத்துடன்) இருள் கும்பலெல்லாம் விலகி விடியற் காலமாயிற்று. மோகம் என்கிற அந்தகாரத்தை யொழித்து விகற்பங்களென்கிற நித்திரையை யடியோடழித்து சிரத்தை, விவேகம், மதி, சாந்தி, யமம், இவை முதலான ஸாதனங்களால் ஜகத்ஸ்வரூபமாய் இருந்துகொண்டு இந்த போதம் என்கிற சந்திரன் பிரகாசிக்கிறான். (அதனால்) நான் ஸர்வவியாபகபிரம்மமாக ஆய்விட்டேன். பகவதியான விஷ்ணுபக்தியின் அருளால் எல்லாவிதத்திலும் செய்யவேண்டிய காரியங்களைச் செய்தவனாக ஆய்விட்டேன். நானிப்போது ஒருவருடனும் சேராமல் ஒன்றையும் கேட்காமல் ஒரு பலத்தையும் உத்தேசிக்காமல் திக்குகளுக்கும் விதிக்குகளுக்கும் போய்க்கொண்டு சாந்தனுயும் பயம் துக்கம் ராகத்துவேஷம் முதலானவைகளின் கலக்கம் இவைகளில்லாதவனுயும் இருந்து நித்திய முக்த சுபாவனாகவும் மனனமென்னும் நிதித்தியாஸனம் உள்ளவனாகவும் ஆகிறேன்.

விஷ்ணுபக்தி வருகிறாள்.

விஷ்ணுபக்தி:—(சந்தோஷத்துடன் கிட்டவந்து) வெகுகாலம் கழித்து ஸமஸ்த சத்துருக்களையுமொழித்த உனது தரிசனத்தால் நம்முடைய எல்லா மனோரதங்களும் சித்தியடைந்தன.

புரு:—விஷ்ணுபக்தி தேவியின் அனுக்கிரகமுண்டானால் எதுதான் கிடைக்காது.

காலகளில் விழுகிறான்,

விஷ்ணுபக்தி:—(புருஷனையெழுப்பி) எழுந்திரு குழந்தாய்! இன்னும் உனக்கென்ன வேண்டும் செய்கிறேன்.

புரு:—இதற்கு மேலும் பிரியமிருக்கிறதா?

ஏனென்றால்—

விவேகன் எல்லாப் பகைவர்களையும் வென்று கிருதகிருத்தியனாய் விட்டான். ரஜஸ், தமஸ் இவைகளில்லாத சுத்தானந்த

யமான ஸ்தானத்தில் நானும் ஸ்தாபனம் பண்ணப்பட்டேன் ஆனாலும் இது உண்டாக வேண்டும்.

(பரதவாக்கியம்)

இவ்வுலகில் மேகமானது வேண்டிய மழையைப்பொழிய வேண்டும். அரசர்கள் நாநாவித உபத்திரவங்களும் நீங்கிப் பூமியை யாளவேண்டும். பெரியோர்கள் உன்னுடைய அனுக்கிரகத்தால் தத்துவ ஞானத்தை யடைந்து அக்ஞானத்தையொழித்து, ஐம்புலன்களின் விஷயங்கள், மமதா, ஆதங்கம் (கவலை) இவைகளை சேறாக உடைய சம்சாரமென்னும் கடலைத் தாண்டவேண்டும்.

எல்லாரும் போகிறார்கள்.

ஸ்ரீகிருஷ்ணமிசிர மகாஞானியால் செய்யப்பட்ட
பிரபோதசந்திரோதய நாடகத்தில்
ஆறாவது அங்கம்
முற்றிற்று.

பிரபோதசந்திரோதயம்
முற்றிற்று.

சுபம்.



## விக்ரமோர்வசீயம்.

இது மகாகவி காளிதாஸராலியற்றப்பட்ட சிறந்த நாடக மென்பது யாவரும் அறிந்த விஷயம். இப்புத்தகம் இது வரையில் தமிழில் வெளிவரக் கண்டிலம். இதன் மகிமையை விரிக்க வேண்டியது அவசியமில்லை. இனிமையும் விளங்கக் கூடியதுமான தமிழ் வசன நடையில், அங்கம், காட்சி முதலியன பிரித்துச் செவ்வனே எழுதப்பட்டிருககிறது. ஸம்ஸ்கிருத பாஷா ஞானமில்லார்க்கு இவ்வரிய நூல் பயன் படவேண்டு மென்கிற நோக்கத்தைக் கொண்டே இந்நூல் வெளியிடப் பட்டது.

விலை அணா 8

## மாயாவதி.

இது ஒரு தமிழ் நாடகம். வரகவி- திரு-அ- சுப்பிரமணிய பாரதியாரால் இயற்றப்பட்டது. இக்கதை ஸ்ரீமத் பாகவதம் தசம ஸ்கந்தத்திலுள்ளது. இந் நாடகம் படிப்போருடைய மனதிற்கு இன்பமும், குழந்தைகளும் சுலுவில் அறிந்து கொள்ளத் தக்கதாய் எழுதப் பட்டிருப்பது மன்றி இதில் நடிப்போர்க் கேற்றபடி அபிநய விவரங்களும் இராக தாள மெட்டுக் கொத்த பாடல்களும் சேர்க்கப் பட்டிருக்கின்றன.

விலை அணா 8